

# அரைஞாண் கயிற்றில்

# அழகிய நெக்லஸ்!

விளக்கம் 43-ம் பக்கம்

# Money is Music



## Listen with interest at KCUB

Money saved adds music to life.
Save at KCUB and enjoy the music of life.




**THE KUMBAKONAM CITY UNION BANK LTD**

REGISTERED OFFICE KUMBAKONAM 612 001

FOR PROTECTION AND GROWTH

APRC

# போட்டி



மங்கையர் மலர் வழக்கம்போல இவ்வருடமும் நமது அன்பு வாசகிகளுக்குப் போட்டியை அறிவிக்கிறது.

# வாழ்க்கையில் நான் கற்ற பாடம்!

மேற்கண்ட தலைப்பில் கட்டுரைகளை அனுப்பி வையுங்கள். சிறந்த முதல் மூன்று கட்டுரைகளுக்குப் பட்டுப் புடவைகள் பரிசாக அளிக்கப்படும்

**முதல் பரிசு: ரூ 900/- மதிப்புள்ள பட்டுப்புடவை**

**இரண்டாம் பரிசு: ரூ 700/- மதிப்புள்ள பட்டுப்புடவை**

**மூன்றாம் பரிசு: ரூ 400/- மதிப்புள்ள பட்டுப்புடவை**

பிரசுரத்திற்கு ஏற்கப்படும் கட்டுரைகள் தொடர்ந்து வரும் இதழ்களில் பிரசுரிக்கப்படும்.

**கட்டுரைகளை பிரபலமான பிரமுகர்கள் தேர்ந்தெடுப்பார்கள்.**

புடவைகளை வாசகிகளுக்கு அன்புடன் அளிக்க இசைந்துள்ளவர்கள்:

**ராதா சில்க் எம்போரியம்**

1, சன்னதித் தெரு, சென்னை-4

கட்டுரைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி: 10.1.1984



வைத்துக் கொண்டுதான் நாங்கள் ஏதாவது செய்ய வேண்டும் என்று நினைக்கிறோம். மாக்ஸிமம் நாங்கள் செய்கிறோம் என்றுதான் சொல்ல வேண்டும்.

''வெறுமனே மாநாடுகள் நடத்தி, ஊர்வலம் போட்டுவிட்டால்பெண்கள் இன்றைக்குப்படும் சித்திரவதைகளுக்கெல்லாம் விடிவு பிறந்துவிடும் என்று நம்புகிறீர்களா?...

# பெண்களால் என்ன செய்யமுடியும்?

சென்னை நகர ஷெரீபாகத் திருமதி. சரோஜினி வரதப்பன் நியமிக்கப்பட்டிருக்கிறார். திருமதி. கிளப் வாலாவிற்குப் பின் மிக நீண்ட ஆண்டுகளுக்குப் பிறகு இந்தப் பெருமையைப் பெற்றிருக்கிறார் நமது பிரபல சமூக சேவகியான திருமதி. வரதப்பன்.

எளிமையும், மிக நீண்ட கால சமூக சேவை அனுபவமும், பிரச்னைகளை உணர்ந்து கொண்டு தீர்க்கமாகப் பேசும் பேச்சுமாகச் சேர்ந்து இவரை ஒரு ஆக்க பூர்வமான பெண்மணி என்றுதான் கூறத் தோன்றுகிறது.

அகில இந்திய மாதர் சங்கத்தின் தலைமைப் பொறுப்பேற்று டில்லியில் பல சமூகக் கொடுமைகளை எதிர்த்திருக்கிறார். சமீபத்தில் சென்னையில் நடந்து முடிந்த மாதர் சங்கங்களின் ஒருங்கிணைந்த மாநாடு எவ்வளவு தூரம் வெற்றி பெறும் என்று கோபமூட்டும்படி கேட்டபோதும் அவர் சீறவில்லை.

''இதிலே ஒரு விஷயத்தை நீங்க புரிஞ்சிக்கணும். லேடீஸ் கிளப் அங்கத்தினர்கள் அனைவரும் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். ஒவ்வொருவருக்கும் அன்றாடப் பிரச்னைகள் ஆயிரம் இருக்கு. விலைவாசியில் இருந்து 'காஸ்' வராமல் தவிப்பது வரை அத்தனையும் அதனுள் அடக்கம். இவ்வளவையும் சமாளித்துக் கொண்டு இந்த சமூகத்திற்கும் தங்களால் முடிந்தது ஏதாவது செய்ய வேண்டும் என்ற ஆர்வத்தோடு வருகிறார்கள். அவர்களுக்கு இருக்கும் நேரமும், பண வசதியும் குறைவு. இப்படிப் பட்டவர்களை

''நிச்சயமாக நான் அப்படிச் சொல்லவில்லை. சொல்லப் போனால் ஊர்வலம், மாநாடுகளில் எனக்கும் நம்பிக்கையில்லைதான். ஒவ்வொரு தனி மனிதரும் திருந்தினாலொழிய சமூகம் ஒட்டு மொத்தமாகத் திருந்துவது என்பது கிடையாது. ஆனால் மாநாடுகள் நடத்தும்போது பெண்களிடம் ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துகிறோம். அட்லீஸ்ட் அவர்கள் சிந்திக்க ஆரம்பிக்கும் கட்டமாகவாவது இது இருக்கிறது. எதுவுமே இல்லாமல் இருப்பதை விட ஏதோ ஒன்றை ஆரம்பித்தால், அந்த விதை ஊன்றி மரமாகாதா என்பதுதான் எங்கள் ஆசை...''

''நிறைய மாதர் சங்கங்கள் இருக்கின்றன. நீங்கள் அகில இந்திய மாதர் சங்கமும் வைத்திருக்கிறீர்கள். இதுவரை ஒன்றும் சாதித்ததாகத் தெரியவில்லையே...'' என்று காரமாகக் கேட்டபோதும் அவர் உறுதியாக மறுத்தார்.

''முதலிலே சொன்னது போல நடுத்தர வர்க்கப் பெண்களாகச் சேர்ந்து குறைந்த நேரம், குறைந்த பணம் கொண்டு போராடும் போராட்டம் இது. ஆனால் அதற்காக நாங்கள் எதுவுமே செய்யவில்லை என்று எங்களை தாக்கியெறிந்து பேசாதீர்கள்.

காமன்வெல்த் மாநாட்டில் இன்றைய பெண்களின் நிலையை 'ரிப்போர்ட்' தயாரித்து, ஒவ்வொரு பிரதிநிதிக்கும் கொடுத்தோம். பெண்கள் கொடுமைப்படுத்துவதாகச் செய்தி வரும் இடங்களுக்கெல்லாம் நாங்களே சென்று அவர்களை மீட்க எங்க

-மஞ்சுளா ரமேஷ்

ளால் முடிந்ததைச் செய்திருக்கிறோம். சமீபத்தில் 'துளசி' என்ற பெண்ணைக் காப்பாற்றிய செய்தியைப் படித்திருப்பீர்களே!

'பாபூகர்' என்ற ஒரு இல்லத்தை அமைத்திருக்கிறோம். அன்றாட வாழ்வில் அல்லல்பட்டு, அதன் தளைகளில் இருந்து விடுபட்டுப் போக இடமில்லாமல் தவிக்கும் பெண்களுக்கான இல்லம் இது. இங்கு வந்து தங்கும் பெண்களின் பிரச்னைகளைக் கேட்டு, அவர்கள் கணவன், மாமியாரிடம் பேசிப் பிரச்னையைச் சுமுகமாகத் தீர்த்து வைக்கிறோம். தீர்த்து வைக்க முடியாத நேரங்களில் நாங்களே விவாகரத்திற்கு உதவி செய்கிறோம். எதிர்காலப் பாதுகாப்பிற்கு நல்ல வேலையைத் தேடித் தருகிறோம்...''

''இது நல்ல 'ஐடியா'வாக இருக்கிறதே. இங்கே தமிழ்நாட்டில் இது




போன்ற ஒரு அமைப்பை ஏற்படுத்தலாமே!''

''இது போன்ற பல திட்டங்களுக்காகத்தான் முதலில் அனைவரும் ஒன்று சேர வேண்டும் என்பது. பல ஆர்வமுள்ள பெண்களின் அமைப்புக்கள் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன. இப்படி இருப்பவர்கள் தவிர, ஏதாவது செய்ய வேண்டும், ஆனால் அதற்கு யாரை அணுகுவது என்று தெரியாமல் இருப்பவர்கள் பல. இப்படிப்பட்ட அனைவரும் ஒரு அமைப்பின் கீழ் வர வேண்டும். ஒரு பெரிய குழுவாக அமையும் போது தான் எதையாவது செய்ய முடியும். இப்படி ஒரு ஆர்வத்தின் காரணமாகத்தான் சமீபத்தில் இந்தப் பெண்கள் மகாநாட்டையும் கூட்டினோம்...''

''இதன் தொடர்ச்சியாக என்ன செய்யப் போகிறீர்கள்...''

''வரதட்சிணை எதிர்ப்பு முறையில் யாரும் வரதட்சிணை வாங்க மாட்டோம் வரதட்சிணைகொடுக்கவும் மாட்டோம் என்று சபதம் எடுத்ததைப் பத்திரிகைகளில் படித்திருப்பீர்கள். இது தவிர பெண்களுக்கு 'இலவச சட்ட உதவிக் குழு'வை ஏற்படுத்த வேண்டும் என்று திட்டமிட்டிருக்கிறோம். ஒவ்வொரு ஏரியாவிலும் 'பெண்களின் நிவாரணக் குழு'. ஒன்றை ஏற்படுத்தி அந்தந்த இடங்களின் பெண்களின் பிரச்னைகளைத் தீர்த்து வைக்க முயலப் போகிறோம்.''

''இதற்கு அங்கங்குள்ள மாதர் சங்கங்களை நீங்கள் பயன்படுத்திக்கொள்ளலாமே!''

''நிச்சயமாக. இதற்காகத்தான் நாங்கள் அனைவரும் ஒன்றுபட்டு இருக்கிறோம். வெளியூர்களிலுள்ள மாதர் சங்கங்களும் இணைந்து மேலும் தங்களுடைய சமூக சேவையை உயர்த்திக் கொள்ள வேண்டும் என்பதுதான் எங்களுடைய விருப்பம்...''

''நீண்ட காலம் பயன்பெறும் திட்டங்களை வைத்திருக்கிறீர்களா''

''இதிலே ஒரு பிரச்னை வந்துவிடுகிறது. இன்றைக்கு இருக்கும் பல சமூக சேவை நிறுவனங்கள் இப்படிப்பட்ட மாதர் சங்கங்களில் இருந்து தோன்றியவைதான். ஒளவை இல்லம், அடையாறு கேன்ஸர் இன்ஸ்டிடியூட், பத்மா சேஷாத்ரி ஹையர் செகண்டரி ஸ்கூல் போன்றவை முதலில் மாதர் சங்கங்களால் சிறிய அளவில் ஆரம்பிக்கப் பட்டவைதான். பிறகு அவை ஒரு இன்ஸ்டிடியூஷனாக மாறும்போது அந்த இன்ஸ்டிடியூஷனின் வளர்ச்சியில் கவனம் போய் விடுகிறது. பொதுவான சமூக சேவைக்கு நேரம் இருப்பதில்லை. ஆனால் இப்படிப்பட்ட நீண்டகால திட்டங்களும் நடந்திருக்கின்றன என்பதைத்தான் கூறவந்தேன்..''

''ஆக, சமூக சேவைக்கு, சமூக விழிப்புணர்ச்சி ஏற்படுத்துவதற்கு இங்கே ஒரு தலைமை இல்லை என்பதை நீங்களே ஒப்புக் கொள்வீர்கள் இல்லையா? இரண்டு மாதத்திற்கு முன் மங்கையர் மலர் பேட்டியில் கூட டி. வி. டைரக்டர் சொல்லியிருந்தாரே, நம் தமிழ்நாட்டில் தான் பெண்களுக்கு விழிப்புணர்ச்சி குறைவாக இருக்கிறது என்று...''

''உண்மைதான். டில்லியில் எல்லாம் ஏதாவது ஒன்று நடந்தால் உடனே பெண்கள் படை திரண்டு வந்து விடுகிறது. இங்கே அந்த மாதிரி இல்லையென்றால் நீங்கள் சொன்ன மாதிரி அதற்குத் தலைமைத் தாங்க யாரும் இல்லை என்பதுதான் காரணம். ஆனால் ஒட்டுமொத்தமாக ஒரு வித எதிர்ப்புணர்ச்சியும் இல்லை என்று சொல்லிவிட முடியாது. விலைவாசி எதிர்ப்புப் போராட்டம், வரதட்சணை எதிர்ப்பு என்று சிறிய சிறிய அளவில் ஆங்காங்கு நடந்து கொண்டுதான் இருக்கிறது. இவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து விட்டார்களானால் ஒரு நல்ல திருப்பம் உண்டாகும் என்று நம்புகிறேன்.''

''சென்னை நகர ஷெரீஃப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு இருக்கிறீர்கள். ஒரு சமூக சேவகி என்ற முறையில் பெண்களுக்கு ஏதாவது செய்யத்திட்டமிட்டு இருக்கிறீர்களா...''

''இன்னும் நான் என் பணிகளைத் துவக்கவில்லை. என்னுடைய பணிகள், அதிகார வரம்புகள் இவற்றைத் தெரிந்து கொள்ளவில்லை. கூடிய சீக்கிரம் என் வேலைகளைத் துவக்கியவுடன் வழக்கம்போல என்னால் முடிந்ததைச் செய்வேன் என்று உறுதியோடு கூறுகிறேன்...''

---



# எப்போதும் பெண்

✲ யாரும் உலகத்தில் செத்துப் போகவே கூடாது. துக்கத்தை என்னால் தாங்கிக் கொள்ளவே முடியாது. அப்படிப்பட்ட துக்கம் எனக்கு வேண்டாம் என்று சொன்ன சின்னு அந்தத் துக்கத்தையெல்லாம் 'எப்போதும் பெண்' வாசகர்களிடம் விட்டு விட்டு இறந்து போய் விட்டாள்.

திருமதி. சிவசீலி இரணியல்.

✲ சுஜாதா சார் எத்தனையோ கதைகள் எழுதியிருக்கலாம். ஆனால் அத்தனை கதைகளையும் 'எப்போதும் பெண்' கதை ஓரங்கட்ட வைத்த அதே நேரத்தில் கதையின் முடிவில் சின்னு இறந்து விட்டாள் என்று அறிந்ததும் என் கண்களில் நீர் ஓரங்கட்டி வழிந்தது.

லட்சுமி செங்குட்டுவன் வேலூர்.

✲ முன்னரே எதிர்பார்த்த முடிவுதான் என்றாலும் சின்னுவை அநியாயமாய் 'மனுஷன்' (சுஜாதா) கொன்றதை எண்ணி மனம் தாங்கவில்லை. கருவில் தொடங்கிய கதை அதே கரு உருப்பெற்று தான் ஒரு கருவை ஏற்று அது வெளிப்படும் தருணத்தில் மரணமடைவது வரை கதையைக் கொண்டு போன விதம் அருமை! சின்னுவின் இரண்டுபக்கக் குடும்பத்தாருக்கு எப்படி ஆறுதல் சொல்ல...

கலைக்கண்ணன் கோவை.

✲ சின்னுவை சாகடித்ததை, அதுவும் அவள் தாய் இறந்த அதே கோளாறுகளினால் என்பதை மன்னிக்கவும் முடியவில்லை, மறக்கவும் முடியாது.

திருமதி சாரு. மன்னார்குடி

✲ சுஜாதா சார், 'ஏன் சார் இப்படி முடித்து விட்டீர்கள்? கதையின் முடிவு எனக்குச் சிறிது கூடப் பிடிக்கவில்லை. எவ்வளவோ நவீன மருந்துகள் வந்து கொண்டு இருக்கும் சமயத்தில் இருபது வருடங்களுக்கு முன் தன் தாய் இறந்ததைப் போலவே இவளையும் இறக்க வைத்தது மிகவும் கொடூரம். முதலில் அசட்டையாக இருந்தநர்ஸை வேலையை விட்டு நீக்குங்கள். கடைசியில் எப்போதும் ஆண் ஆண்தான் என்பதைக் காட்டி விட்டீர்கள்!

செல்வி காளையார்கோவில்.

# ஸ்ரீ மாதா

ரா. கணபதி

அமரர்கள் இமயத்தில் அம்பிகைக்காக அருந்தவமியற்றிக் கொண்டிருக்கும் இப்போது நாம் ஓர் அடிப்படைக் கேள்விக்கு விடை தேடுவோம்.

எதிராளி எவராயினும் அவருடைய சக்தியில் பாதி பண்டனைச் சென்றடைந்துவிடும். இவ்வாறு அவன் சாதுர்யமாக வரம்வேண்டிப் பெற்றிருந்தான் எனக் கண்டோம். நாரதரோ அம்பிகையின் துணை பெற்றால் அவனை வென்றுவிட முடியுமென்கிறார். இங்கேதான் கேள்வி எழும்புகிறது. அன்னையின் அருளால் அமரர்கள் அதிக பலம் பெற்றால் இந்தப் பலத்தில் பாதியும் பண்டனைச் சேர்ந்ததாகத்தானே ஆகும்? அதன் பின் அவனை எப்படி வெல்ல இயலும்?

உண்மை. அன்னையின் அருளால் அமரர்கள் அதிக பலம் பெற்றால் இப்படித்தானாகும். ஆனால் அந்த அன்னையே ஸாக்ஷாத்தாக அமரர்களின் பொருட்டு அஸுரனோடு போரிட வந்தால்?

ஏன்? பண்டனின் வர பலத்தால் அப்போது அவளுடைய சக்தியிலும் பாதி அவனுடையதாக வேண்டியதுதான் என்று தோன்றுகிறதா?



இப்படித் தோன்றுவது சரியல்ல. ஏனெனில், அவள் யார்? அவளே சக்தி. அவளைத் தவிர மும்மூர்த்தியர் உட்பட ஏனைய எவர் பெற்றுள்ள சக்தியும் அவள் அவர்களுக்கு அளித்ததே. இவற்றில் பாதியைப் பண்டன் தன்னுள் வாங்கிக்கொள்ள முடியலாம். ஆனால் அவளோ பூர்ண மஹா சக்தி. பிரிக்கவும் பிளக்கவும் முடியாத அகண்ட, அபின்ன சக்தி. இதிலே பாதி என்று ஒன்று பகுக்கப்படவே இடமில்லை. அனந்தத்தை, ஆகாசத்தைப் பாதியாக்குவதென்பது சாத்தியமா? அப்படித்தான் இதுவும். சக்தியேயான அவளது சக்தியைப் பாதி படுத்தவும் முடியாது; அப்படியே, பாதி படுத்தினாலுங்கூட அந்தப் பேராற்றல் பெருக்கை பண்டனாயினும் வேறெந்த மஹா அஸுரனாயினும் அவனால் வாங்கித் தாங்கிக்கொள்ளவும் முடியாது. இதனால்தான் நாரதமாமுனி பராசக்தி ஒருத்தியே தேவருக்குக் கதி என்று குறிப்பிட்டுக் கூறியது.

இதிலிருந்து அம்பிகை அமரர்களுக்கு அருட்துணையும் அரும் பலமும் தருவதுமட்டுமின்றித் தானே அவர்கள் சார்பில் அமர் புரிய வரப் போகிறாளென்று ஆகிவிட்டதல்லவா?

தேவராஜனான சக்ரன் ஹிமோத்கிரியில் தேவியைக் குறித்துத் தவம் தொடங்கி நெடுங்காலமாகி விட்டது. அங்கே சோணிதபுரத்திலோ காமமோஹிதனாகக் கட்டுண்டு கிடந்த பண்டனிடம் அஸுரகுரு சுக்ரர் சென்று புத்தி புகட்டிவிட்டார். விஷ்ணு மாயைக்கு அவன் வசப்பட்டு விட்டதையும் அதனால் விச்வ வியாபகமாகத் தன் ஆட்சியை நிலைநாட்டிக் கொள்ளும் லட்சியத்தை மறந்து விட்டதையும் அழுத்தமாக எடுத்துக் காட்டி அறிவுறுத்தி விட்டார். பண்டன் குறிப்பாகக் குரோதத்துக்கே உருவகமானதால் உடனே போர் வெறியில் உசுப்பப்பட்டு, பெண் மயக்கிலின்று விடுபட்டான். அஸுரர்களின் ஸங்கல்ப பலம் அதிசயமானது. இதற்குப் புராணங்கள் காட்டும் அநேகச் சான்றுகளில் இதுவும் ஒன்று. ஆன்மிய லட்சியங்களுக்காக ஸாதகர் அநேகர் கைவிட முடியாமல் சிரமப்படும் பெண் மயக்கிலிருந்து அஸுர லக்ஷியத்துக்காக பண்டன் கணத்தே விடுபட்டு விடுகிறான்! நம்முடைய ஸ்ரீமாதாவின் ஆவிர்பாவத்துக்கான காலம் வந்துவிட்டதென்று திருமால் தனது இடைக்கால மாய நாடகத்துக்குத் திரைவிழச் செய்தாரென்றும் சொல்லலாம்.

பண்டன் மீண்டும் போருக்குப் புறப்பட ஆயத்தமாகி விட்டானென்று இந்திரனுக்குத் தெரிந்தது. 'நடுவிலே ஓய்ந்திருந்தது விட்டு இப்போது மீண்டும் கிளர்ந்தெழுந்திருப்பதால் முன்னிலும் பயங்கரமாகத் தாக்குவான் என்பது நிச்சயம். தேவியோ இன்னும் பிரஸன்னமாகாமல் சோதிக்கிறாள். இப்போது செய்யக் கூடியதென்ன?' என்று இந்திரன் யோசித்தான். யோசித்து, முடிவாகச் செய்த தீர்மானத்தை மற்ற தேவர்களுக்குக் கூறினான்.

''பண்டன் படையெடுத்து வரப்போகிறான். அவனுக்கு முகம் கொடுக்க நம்மால் இயலாது. அம்பிகைதான் நமக்கு ஒரே கதி என்பதை மறக்க வேண்டாம். அவள் நம்மிடம் வராவிடில் என்ன? நாம் அவளிடம் போய்ச் சேருவோம். அதாவது, 'மஹா யாகம்' என்னும் முறைப்படி அக்னி குண்டம் அமைப்போம். அதில் நம் அங்கங்களை அறுத்துப் போட்டு ஆஹுதி செலுத்துவோம். இதிலே அம்பிகை ப்ரீதியுற்றால் நமக்கு தேவராஜ்யாதிகாரத்தை நிச்சயமாக உறுதிப்படுத்திக் கொடுத்துவிடுவாள். அல்லது நாம் ஏதோ ஜனிலே சில

பகுதிகளை அர்ப்பிப்பதால் மட்டும் அவள் ப்ரீதியுறுவிடில், முடிவாக நம் சரீரத்தையே அக்னி குண்டத்திலிட்டுவிடுவோம்; அதாவது நம் ஆவியையே அவளுக்கு அவியாக்கி அவளைச் சென்றடைந்து விடுவோம். அப்போது அவள் நம் உயிரை அவளுக்குள்ளேயே கரைத்துக் கொண்டு, தேவ ராஜ்யத்துக்கும் மேம்பட்ட ஆத்ம ஸாம்ராஜ்யத்தை அருளி விடுவாள். ஆக, இரண்டிலொரு ராஜ்யத்தைப் பெறுவதற்காக மஹாயாகம் தொடங்குவோம்'' என்றான்.

பண்டனிடம் தோற்பதன்றி வேறு வழியில்லாத நிலையில் இவ்வாறு தங்களை அம்பிகைக்குப் பலி தருவதொன்றே அறிவுடைமையென்று அத்தனை அமரர்களும் ஏற்றனர்.

எனவே, மஹாயாகம் தொடங்கப் பட்டது.

ஓங்கி ஒளிரும் வேள்வித் தீயில் தேவர்கள் தங்களது ஒளிமயமான அவயவங்களைச் சற்றும் தயங்காது செருத்துச் செருத்து மந்திரபூர்வமாக அர்ப்பித்தனர்.

அவர்களது பக்தி, சிரத்தை, லக்ஷ்ய ஈடுபாடு ஆகியவற்றின் முழுச் சிறப்பையும் உலகுக்கு வெளிப்படுத்துவதற்காக அம்பிகை சோதனையை மேலும் சற்று நீடித்தாள்.

வெட்டக் கூடிய அங்கங்களையெல்லாம் ''ஸ்வாஹா' செய்தாயிற்று. அப்புறம் அமரர்கள் எஞ்சிய தங்களது சரீரங்களோடு தாங்களே வேள்விக் குண்டத்தில் புகுந்து விட்டனர்.

அவ்வளவில்,

ஆஹா! ஸ்ரீமாதா உதித்தே விட்டாள் சீருடன்!

முதலில் யாகாக்னியினின்று அவ்வக்னியை விடப் பேரொளி கூடிய ஓர் இணையற்ற ஜோதி எழும்பியது. அதிசய ஜோதி!

கோடி சூர்யனைப் பிரகாசித்தபோதிலும், சற்றும் சொலுத்தாமல், கோடி சந்திரனைத் தண்மை நல்கிய ஜோதி! சந்திரனிலிருந்து அமுதம் பெருகுமெனில், இந்த ஜோதியிலிருந்தோ அனைவர்க்கும் அன்னையான ஸ்ரீமாதாவின் அன்பமுதம் அதனினும் இனித்ததாகப் பாய்ந்தது. அதிலே அமரர்களின் கரிந்த மேனிகள் புத்துயிரும் புத்தெழிலும் புதுத் தெம்பும் பெற்று எழும்பின. இவர்களது தவத்தை அவள் அங்கீகரித்ததில் அறுத்துப் போகங்கிய அங்கங்கள் செழித்து மீண்டும் வளர்ந்தன.

இப்படி அமரர்கள் புத்துருவம் பெறும் போதே அந்தச் செக்கர் பெருஞ்சோதியும் திவ்ய மாதாவாகத் திருவுருவம் பெற்றது. திருவாழி ஒன்றினுள் திகழ்ந்தாள் திருவுருக் கொண்ட திரிபுரஸுந்தரி. ஸ்ரீசக்ரம் என்பது தான் அந்தத் திரு ஆழி. அடுக்கடுக்காய், ஒன்றினுள் ஒன்றாய், ஒன்பது வரிசையாய் அமைந்த அது தான் அன்னைக்கும், அவளது உறைவிடத்துக்கும், ஸகல பரிவாரங்களுக்கும் ஒருங்கே உருவமாக அமைந்த ஸ்ரீ யந்த்ர மாக உபாஸிக்கப்படுவது.

தோன்றும்போதே தன்னோடு இணை பிரியாததான ஸ்ரீ சக்ரத்துடன் தோன்றிய அந்த தேவியின் ரூப ஸௌந்தர்யத்தை எப்படி வர்ணித்து முடியும்? மூவுலகிலும் அகற்கிணையான அழகுஇல்லாததால்தான் அதைத் திரிபுரஸுந்தரி என்பது. ஸ்தூலம் — ஸூக்ஷ்மம் — காரணம் என்ற மூன்று புரங்களுக்கும் உள் இலங்கும் அழகாம் ஆத்மாவே அதுவாதலாலும் திரிபுரஸுந்தரி.

செந்தீயிடையிருந்து உற்பவித்து, அதனினும் காந்தி வாய்ந்த செவ்வுதயக் கதிரவனின் வண்ணத்தில் அவள் தோற்றமளித்த போதிலும் இந்தச் சிவப்பு கண்ணை உறுத்தாமல், கண்ணுக்கு மட்டுமின்றிக் கருத்துக்கும் மென்மையின் மதுரத்தை ஊட்டியது. பூர்ண சக்தியின் ஆவிர்பாவமாயினும் தனது ஆற்றலால் அதிசயிக்கவும் அச்சுறுத்தவும் செய்யாமல், அவகதி உற்ற அமரரை ஆற்றித் தேற்றும் அருமை அன்னையாகத் தன்னைக்காட்டிக்

---

## அட்டையில்...

குமாரி வித்யா விஜயராகவன் மாநிலக் கல்லூரியின் இரண்டாம் ஆண்டு மாணவி. படிப்பிலே படு சுட்டி. தெய்வ பக்தி நிறைந்தவர். தினம் காலையில் துளசிப் பூஜை செய்யத் தவறுவதில்லை. அதிகம் பேசாத, அடக்கமான சுபாவம் — பரத நாட்டியத்தை முறைப்படியாகக் கற்றுத் தேர்ந்து, மேடையில் நடனக் கச்சேரிகளும் செய்துள்ளார்.

**வண்ணப்படம்: ரங்கேஷ்**



# உண்மைதான்...சிறந்த சேமியா
# என்றுலே சிறந்த பாயசம்...

இதுவரை கண்டதில்லை
இது போன்ற சேமியா:

- தரம் மிகுந்த மைதா மாவினுல் தயாரிக்கப்பட்டது.
- சமைக்கும்போது பசைபோல ஒட்டிக்கொள்வதில்லை.
- நவீன இத்தாலிய எந்திரங்களினுல் சுகாதாரமான முறையில் தயாரிக்கப்படுவது.
- சுவையான பாயசம் தயாரிக்க மிகவும் ஏற்றது.






பிஸ்கட் தயாரிப்பாளர்கள் அளிக்கும் சிறந்த சேமியா

HTM-AFL-1342

கொள்ளவந்த கருணாமூர்த்தமே அது. அதனால் இதைவிட இனியதாக, கோமளமாக எதுவுமே இருக்க முடியாது என்னும் படிப் பரம லலிதமாக உருக்கொண்டாள். ''லலிதா'' என்றே விசேஷ நாமமும் கொண்டாள். குழந்தைகளைக் கொஞ்சிச் சீராட்டுவதற்கு 'லாலனம்' என்று பெயர். அவ்வாறு அன்று அமரரையும், அன்றிலிருந்து அடியார் அனைவரையுமே தனது உருவப் பாங்கினாலேயே அருமைக்கிட்டுச் செல்லம் கொடுக்கும் தாய்தான் லலிதா. அழகுச் சாரத்தின் எல்லை (ஸௌந்தர்ய ஸார ஸீமா), ஆனந்தச் சாற்றின் ஆழ் கடல் (ஆனந்த ரஸ ஸாகரா) என்றெல்லாம் புராணம் வர்ணிக்கும் அவளை ஆதி சங்கரரும் 'ஸௌந்தர்ய லஹரி' யாகவே துதித்திருக்கிறார்.

ஜபா புஷ்பமெனும் செம்பருத்திப் போன்ற மேனி வண்ணம் கொண்டதால் அருணா எனப் பெயர் பெற்றவள் இக்கருணாகரி. மாதுளம்பூப்போன்றசெ நி வஸ்திரம் பூண்டு திகழ்கிறாள். இப்படி ஒரேசிவப்பு மயம். ஏனெனில் சிவப்புத்தான் அன்பின் நிறம், ஆற்றலின் நிறமும். யாவும் அடங்கிய சிவவெண்மையிலிருந்து உலக நாடகமாகிற வர்ணபேதங்களை உண்டு பண்ணும் Infra - Red என்பார் நம் காஞ்சி முனிவர்!

கேசாதி பாதம் திவ்யாபரணங்களோடு ஒளிரும் அன்னை, தன் அங்க சம்பந்தத்தால் அந்த ஆபரணங்களுக்கு அழகூட்டுகிறாளேயன்றி, தான் அவற்றால் அழகு பெறவில்லை.

தீர்க்கமான அவளது திருநயனங்களில் கிருபை அலையடித்து மோதுகிறது.

பார்க்கப் பார்க்கத் தண்மதியமென நெஞ்சுக்கு மிருதுவான இன்பமூட்டும் வடிவம்.

ஜகத்துக்கெல்லாம் உயிர்சக்தி தரும் பராசக்தி, பிரம்ம விஷ்ணு ருத்ரர்களுக்கும் மூலமான மஹாசக்தி அன்பில் நெருங்கத் தக்க அழகுத் தாயாய் வந்திருக்கிறாள்.

முரண்பாடுகளாகத் தோன்றுபவையும் இடறாமல் ஒன்று சேரும் அற்புத ஸங்கமம் நமது லலிதா மஹாத் திரிபுரஸுந்தரி. அதனால், செல்லம் கொடுக்கும் தாயாயிருக்கும் போதே, நம்மைத் தவற்றிலே செல்லாமல் கண்டிக்கும், தண்டிக்கும் மஹாராணியாகவும் தன்னைக் காட்டிக் கொள்கிறாள். ஸஹஸ்ர நாமத்தில் முதல் நாமம் 'ஸ்ரீமாதா' எனில் அடுத்ததே அவளது பேரரச ஆணையைக் குறிக்கும் 'ஸ்ரீ மஹாராக்ஞீ' என்ற நாமமாகும். நான்கு கரங்களுடன் தோன்றிய அவள் அக்கரங்களில் தாங்கியுள்ள ஆயுதங்களால் நம்மை இவ்வாறு அரசியாக அடக்கிச் செந்நெறிப் படுத்துவதையே காட்டுகிறாள். ஒரு கையிலுள்ள பாசம் கொண்டு நம்மைத் தன்னிடம் கட்டுண்டு கிடக்கச் செய்கிறாள். அவளுக்கு நம்மிடமுள்ள பாசத்தாலே, நாம் இதர பாசங்களில் இடர்ப் படாமல் அவளிடமே கட்டுப்பட்டுக் கிடக்கச் செய்கிறாள். இன்னொரு கையிலுள்ள அங்குசம் அவள் நமது கோபகுணத்திடம் கோபம் கொண்டு அதைக் குத்தி நம்முடைய மமதைமதத்தை அடக்குவதற்காகக் கைக்கொண்டதேயாகும். முன்னிரு கரங்களில் அவள் தாங்கும் ஆயுதங்கள் கரும்பு வில்லும் மலரம்புமாகும். முரண்கள் ஒன்று சேர்கின்றன! இரும்பு வில்லுக்குப் பதில் இனிமை மயமான கரும்பு வில்! நம் மனத்தை வசியப் படுத்தும் அவளது அருள் மனத்துக்கே இந்த தநுக அடையாளம். குத்தும் அம்புகளுக்குப் பதிலாகவோ பரம மென்மையான புஷ்ப பாணங்கள்! நம்முடைய ஐந்து புலன்களை அடக்கித் தெய்வ ரஸத்தில் தோய்க்கவே ஐந்து மலர்களை அம்பாகக் கொண்டிருக்கிறாள்.

இன்னும் ஒரு பெரிய முரண்பாடும் இவளிடம்! ஞான மாதாவான இவள் சிருங்கார ரஸம் அப்படியே ஒன்று சேர்ந்த தேக்கமாக — ''சிருங்கார ஏக ரஸாலயா''வாக—இருக்கிறாளாம்!

அதெப்படி?

(தொடரும்)

**அபிராமி தோசை:**

தேவையான அளவு அரிசியை எடுத்துக் கொண்டு, அதில் மிளகு, சீரகம், து. பருப்பு ஆகியவற்றைப் போட்டு உப்பு மாவிற்கு உடைப்பது போல் மிஷினில் அரைத்துக் கொண்டு வரவேண்டும். பின்பு அதில் வெதுவெதுப்பான வெந்நீர் விட்டு அரைமணி நேரம் ஊற வைக்க வேண்டும். பின் அந்த நீரை இறுத்து விட்டு தேங்காய், தேவையான உப்பு, கறிவேப்பிலை, பச்சை மிளகாய், இஞ்சி எல்லாவற்றையும் அதில் போட்டு இட்லி மாவைப்போல் தண்ணீர் விட்டுக் கலந்து, வாணலியை அடுப்பில் வைத்து எண்ணெய் ஊற்றித் தோசை போல் ரவுண்டாகப் போட்டு மூடிவிட வேண்டும். சிவந்த பின்பு திருப்பிப் போட வேண்டும். இது தின்பதற்கு மிகவும் ருசியாக இருக்கும்.

—கருணா சுரேஷ்.

# கல்கி ஜனவரி 15உ

## பொங்கல் மலர்

அதிக பக்கங்கள்

சென்னை, வடபழனி கோயில்
கும்பாபிஷேகத்தை யொட்டி....



# முருகன் அழகன்!

-சிறப்பு மடல்-

காலமெல்லாம் பாதுகாத்துப் படித்துப் படித்துச்
சிலிர்க்க ஒரு புனித பொக்கிஷம்

அனுராதா ரமணன்

வழங்கும்

# சொல் ஒன்று வேண்டும்



நவீன தொடர்கதை

# இதற்கு என்ன செய்வது?

தொகுப்பு: டி. ஆர். ரமேஷ்



மல்லிகா — கோவை

**கேள்வி**

எனக்கு வயது பதினெட்டு. நான் மிகவும் ஒல்லியாக உள்ளேன். நான் தினமும் உடற்பயிற்சி செய்யும் வழக்கம் உடையவள். உடற்பயிற்சி செய்வதால் என் உடல் இன்னும் ஒல்லியாகுமா? குண்டாக ஏதாவது வழி சொல்லுங்களேன்.

**பதில்**

உடல் ஒல்லியாக இருப்பது தவறான விஷயமல்ல. குண்டாக இருக்கும் பலர் தாங்கள் ஒல்லியாக முடியவில்லையே என்று வருத்தப்படும் போது நீங்கள் இப்படிக் கூறுவது வேடிக்கையாக உள்ளது.

மார்பு படபடப்பு, பிளட்பிரஷர் போன்ற கோளாறுகள் இல்லாமல் ஆரோக்கியமாக நீங்கள் இருக்கும் பட்சத்தில் ஒல்லியாக இருப்பது பற்றிக் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை.

அதிகமான உடற்பயிற்சி, சிறு விஷயங்களுக்கும் கவலைப்படுவது போன்றவற்றை விட்டு விடுவது நல்லது. கட்டாயம் குண்டாகத்தான் வேண்டுமென்றால் இனிப்பு, நெய், கிழங்கு வகைகளை உணவில் அதிகம் சேர்த்துக் கொள்ளுங்கள்.

என். தேவிகா — உமையாள்புரம்

**கேள்வி**

எனக்குத் தொண்டையில் எப்பொழுதும் சளித் தொல்லை இருக்கிறது. இதனால் சாப்பிடுவதற்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. இது வேறு ஏதாவது இருக்குமோ என்று பயமாகவும் இருக்கிறது. இதற்கு ஒரு எளிய வழி சொல்லுங்கள்.

**பதில்**

தொண்டையில் உள்சதை வளர்ந்திருக்கலாம். இதற்குச் சிறிய ஆபரேஷன் செய்து கொண்டால் சரியாகி விடும். பயப்பட வேண்டிய அவசியமில்லை. நேரடியான டாக்டர் பரிசோதனையே எதையும் தீர்மானிக்கும்.

ஆ. அமுதா — பவானி

**கேள்வி**

எனக்கு வயது இருபது. எனக்கு அடிக்கடி வெள்ளைப்போக்கு ஏற்படுகிறது. இதனால் உடம்பு ரொம்ப பலவீனமாக உள்ளது. எந்த வேலையும் செய்ய முடிவதில்லை. அந்தச் சமயத்தில் இடுப்பில் அதிக வலி உள்ளது. எனக்கு இந்த வெள்ளைப்போக்கிலிருந்து விடுபட ஏதாவது வழி உள்ளதா?

**பதில்**

உடம்பில் சோகை காரணமாகவோ, இரும்புச் சத்துக் குறைபாட்டின் காரணமாகவோ, அதிக மனக்கவலை காரணமாகவோ இது போல ஏற்படுவது உண்டு. இளம் வயதிலேயே இதுபோல இருந்தால் உடல்நிலை மிகவும் பாதிக்கக் கூடும். எனவே உடனடியாக ஒரு நல்ல பெண் மருத்துவரை அணுகி உடம்பில் சத்து சேருவதற்கு நல்ல மருந்தை சிபாரிசு செய்யச் சொல்லவும். முருங்கைக் கீரை போன்ற இரும்புச் சத்து மிகுந்த காய்கறிகள் இயற்கையான முறையில் உங்கள் குறைபாட்டைக் கட்டுப்படுத்தும்.



ஜே. ரகுராமன் — பாண்டிச்சேரி

**கேள்வி**

எங்கள் பூர்வீகச் சொத்து காத்தா வுடையது. அவருக்கு நான்கு மகன்கள்.

அதில் இரண்டு மகன்கள் உயிருடன் இல்லே. ஒருவர் தவிர மற்றவர்களுக்கு வாரிசுகள் உண்டு. தாத்தா உயில் ஏதும் எழுதவில்லே. இதில் மூன்ருவது பிள்ளே இறந்த பிறகு அவரது மனேவி இறப்பதற்கு சில மாதங்கள் முன்பு உயில் எழுதியதில் எனக்கு சிறுபகுதியும் மேலும் இரண்டாவது சித்தப்பா மகனுக்கு சிறு பகுதியும் என்று எழுதிவிட்டு மீதி சொத்துக்கள் அனேத்தும் தங்கையின் பிள்ளேகளுக்கு எழுதி வைத்துள்ளார்கள். இந்த உயிலே உடைத்து என் தாத்தா சொத்துக்களே அனேத்தும் மூன்ருகப் பிரிக்கலாமா? இல்லே உயில் செல்லுபடி ஆகுமா?

பதில்

உங்கள் தாத்தாவின் மனேவி உயிருடன் இருந்தால் அவரோடு சேர்ந்து ஐந்து பிரிவாகவும், இல்லேயென்ருல் மகன்கள் நால்வருக்கும் நான்கு பிரிவாகவுமே சொத்து சேரும். உங்கள் சித்தப்பாவின் மனேவி தன் பங்கு சொத்துக்கு உயில் எழுதலாமே தவிர மொத்தத்திற்கும் எழுத அவருக்கு உரிமை இல்லே. தாத்தாவின் மகன்களுக்கு வரும் பாகங்களேயே அவரவர் வாரிசுகள் அனுபவிக்க இயலும்.

உஷா அரியலூர்

கேள்வி

நான் எட்டாவது வரை ஒரு எலிமெண்ட்ரி ஸ்கூலிலும், பின் ஒரு ஹைஸ்கூலிலும் படித்தேன். பின் இரண்டு வருட இடைவெளிக்கு பின் பிரைவேட்டாக எஸ். எஸ். எல். சி. எழுதி பாஸ் செய்தேன். பின்னர் மார்க் லிஸ்ட், டி. ஸி. இவை இரண்டுடன் கல்லூரியில் சேர்ந்து பி. யு. ஸி. படித்தேன். இப்போதைய பிரச்சினே என்னிடம் சர்டிபிகேட் புக் இல்லாததே. எந்த வேலேக்குச் சென்ருலும், தேர்வு எழுதச் சென்ருலும் சர்டிபிகேட் முதல் பக்கம் கேட்கிருர்கள். வேலே இடைக்கும் தருவாயில் இருந்து சர்டிபிகேட் இல்லாததால் கிடைத்த வாய்ப்பு நழுவி விட்டது. இதைப் பெற என்ன செய்வது?

பதில்

உங்கள் குழப்பத்தின் காரணம் புரியவில்லே. நீங்கள் பி. யு. சி. முடித்திருந்தாலும் முடிக்காவிட்டாலும் படித்த கல்லூரிக்கு விண்ணப்பம் செய்தாலே அவர்கள் தருகிருர்கள். இதில் பிரச்சினே ஒன்றும் இல்லேயே!

---



# எங்கள் வீட்டு எஜமானி!

சில ஆங்கிலப் படங்களைப் பார்க்கும் போது, அடுத்த நிமிடம் என்ன நடக்கும் என்றே நமக்குத் தெரியாது. இதனில் ரத்தம் உறைய அடுத்த காட்சியை எதிர் பார்த்து நிற்போம். எங்கள் வீட்டு எஜமானி வரும்போதெல்லாம் எங்கள் நிலையும் அப்படித்தான் இருக்கும்.

எங்கள் வீட்டு எஜமானியை யார் என்று நினைத்துக் கொண்டீர்கள்? கந்தாயி யாக்கும்... அவள் வரும் ஜோரென்ன....

## விமலா ரகுநாதன்

வீட்டு வேலைகளைப் பந்தாடுவது போல் செய்துவிட்டுப் போகும் அழகென்ன... நம்மையெல்லாம் பார்க்கும் பார்வை என்ன.... நாம் அவள் தயவை எதிர்பார்த்து நிற்பதைப் புரிந்து கொண்டு உரையாடும் தோரணைதான் என்ன...அடடா! கவிநயத்துடன் பாட கம்பன் இல்லையே!



அவளுக்குப் படிப்பும் வசதியும் இருந்திருந்தால், நிச்சயமாக, அவள் ஒரு அயல்நாட்டு மந்திரியாகவோ, 'அம்பாசிடராக'வோ இருந்திருப்பாள். பலமுறை, பலவிட்டு விஷயங்களை எங்கள் வீட்டு முற்றத்தில் இருந்து அலசும்போது, எனக்கு அப்படித்தான் தோன்றும்!

எத்தனையோ பெரிய விருந்தினர்களையும், விருந்துகளையும் சமாளித்த எனக்கு, அவள் ஒருத்தியின் நாக்கைத் திருப்திப்படுத்த முடியாதபோது... என் திறமை மீதே எனக்கு அவநம்பிக்கை வந்து விடும்.

''தூ... இன்று... நீ நேத்து ராவில வெச்ச ரசம் இப்படி இருக்கு...'' ஒரே நிமிஷத்தில் அவள் என் சைத்திறமைக்கு கொடுக்கும் சர்டிபிகேட்....

எதிர்க்கட்சிகள் போல அவள் எனக்கு அடிக்கடி விடும் நோட்டீஸ்... ''இந்தமாதிரி, என் வேலைகளைக் கொறை சொன்னீங்க, நான் சொல்லாம நின்னுப்புடுவேன்.''

இருமல் மிக அதிகமாக இருக்கும்போது துளசியைக்கொஞ்சம் வாயில் வைத்து மென்று அதன் சாற்றை மட்டும் இறக்கினால் தொண்டைக்கு மிகவும் இதமாக இருக்கும். இருமலும் குறையும்.

—செல்வி

நான் மாத்திரம் அல்ல, குடும்பத்தினர் அனைவரும் அவளுக்கு வளைந்து கொடுக்க வேண்டி வரும்'

''...என்ன கந்தாயி! துணிகளை அலசிப் பிழியாமல் அப்படியே கொடியில் உலர்த்து கிறியே...''

என் வாய் சும்மா இராமல் தப்பித்தவறி ஒருநாள் அவளிடம் கூறிவிட்டு, பிறகு பட்டபாடு...

அதற்குப் பிறகு நான் ஏன் வாயைத் திறக்கிறேன்!

''உஷ்... அம்மா! கந்தாயி ரேடியோ வைக்கிறா... அவளுக்குச் சினிமா பாட்டுக் கேட்கணுமாம்...'' என் மக்கள் சொல்லும்போது, நான் அவர்கள் வாயைப்பொத்துவேன்!

''... நீ எனக்கு என்ன செய்யறே!' கோடி வீட்டு அம்மா வள்ளிக்கு வாரம் சினிமா பாக்க துட்டு கொடுக்குது...''

''...இது என்னம்மா புடவை பொங்கலுக்கு வாங்கித் தரே... நீ கட்டுனியா இக்க முன்னடி...''

இவை அவளுடைய சில அதிருப்திகள்! அதன் விளைவுகள், பாசி கழுவாமல் விடப்பட்ட 'பாத்ரும்'. பெருக்கப்படாத முற்றம், பிசுக்குப் போகாத பாத்திரங்கள்....

அந்தக் காலத்தில் சர்வ வல்லமைகளுடன் செங்கோல்(!) ஓச்சிய மகாராணிகளின் நினைவுதான் எங்களுக்கு வரும்!

எங்கள் வீட்டு எஜமானியைப் பற்றி எங்களுக்குத் தெரியும். ஆனால் வருபவர்கள் அனுசரித்துப் போவார்களா?

''நீ ஆனாலும் மோசம்! இவ்வளவு இடமா ஒரு வேலைக்காரிக்கு... இவள்இல்லாவிட்டால் இன்னொருத்தி....''

கந்தாயியிடம் 'இவள் இல்லாவிட்டால் இன்னொருத்தி' என்ற பேச்சுக்கே இடமில்லை என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்! மூன்றாவது வீட்டு மாமி, கோபம் வந்து இவளை நிறுத்திவிட்டு வேறு வேலைக்காரி 'கிடைக்காமல்' படும் பாடு எங்களுக்கல்லவா தெரியும்!

அவர் இருக்கிறாரே... அதற்கு மேல்....

''கந்தாயி முதலில் வேலை செய்யட்டும். நான் காத்திருக்கிறேன்... அவள் வீடு பெருக்கட்டும். நான் காத்திருக்கிறேன்... முதலில் எனக்குச் சாப்பாடு கூட வேண்டாம். வெளியில் பார்த்துக் கொள்கிறேன்...'' இப்படி.

''அது இல்லைம்மா. உன் அம்மா என்னிய அவ்வளவு சந்தேகப்படுது.... நான் இன்று தூக்கிக்கிறு ஓடியாப்பூடுவேன்... ஏதோ கீழே பர்சு கிடந்ததுன்னு எடுத்து அதுங்கையில கொடுத்தா... என்னமோ அந்தப் பேச்சுப் பேசுதே... நான் சொல்லிட்டேன் என்கிட்ட எந்த 'ராங்'கும் வெச்சுக்காதேன்னு...''

அவள் அந்த ஒரு வாரமும் படுத்தி வெச்ச பாட்டில் என் அம்மா அப்புறம் வருவதாகச் சொல்லி மூட்டைக் கட்டிக் கொண்டு சென்றதுதான் மிச்சம்...

டவுன் பக்கம் ஏதாவது காரியமாக அவளை அனுப்பிவிட்டால் போதும், போகவர அவளுக்குக் கொடுக்கும் ஆட்டோ சார்ஜில், ஓசைப்படாமல் நாம் பஸ்ஸில் போய்விட்டு வந்துவிடலாமே என்று தோன்றும்!

அந்த மாதிரி ஓசைப்படாமல் எத்தக்காரியத்தைத் தான் செய்ய முடிகிறது?

''இது ஏதும்மா புச்சு புடவை.... என் கையில காமிக்கவேயில்லையே.... ஏம்மா குழந்தைக்கு இந்தப் புது ப்ராக்கு எப்போ வாங்கினே!.... ரேஷன்ல பாமாயிலு இந்த மாதம் எப்போ வாங்கினே... ஐய்ய....''

இவை அவளுடைய சில எதிரொலிகள்!

வீட்டுக்கு யாராவது புதிதாக வந்துவிட்டால்போதும்! அவர்களுடைய பிறப்பு, வளர்ப்பு, உறவு முறை முதல் அத்தனை சரித்திரமும் தெரிந்து கொள்ளாவிட்டால், தலைவெடித்துவிடும் அவளுக்கு... 'விருந்

# வளரும் குழந்தைகளுக்குத்

## தேவை ஒரு விசேட திட உணவு...

# ஃபாரெக்ஸ்

**காரணம், குழந்தைகளின் விரைந்த முழுவளர்ச்சிக்கான அதிக ஊட்டச்சத்துள்ள திட உணவாகும் ஃபாரெக்ஸ்.**

**1.** ஃபாரெக்ஸ் புரதச்சத்து நிரம்பியதாகும்—உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு இது அத்தியாவசியமாகும்.

**2.** ஃபாரெக்ஸ் வேறெந்த பிராண்டு செய்யப்பட்ட திட உணவைக் காட்டிலும் அதிக இரும்புச் சத்துள்ளதாகும். இது குழந்தைக்குத் தொற்றுநோய் எதிர்ப்புச் சக்தியையும் ஆரோக்கியமான இரத்தத்தையும் அளிக்கிறது.

**3.** ஃபாரெக்ஸில் கால்ஷியம் மற்றும் ஃபாஸ்ஃபரஸ் சரியான விகிதத்தில் சேர்ந்திருக்கின்றன. ஆரோக்கியமான எலும்புகளையும் திடமான பற்களையும் பெற இவை உதவுகின்றன.

**4.** தவிர ஃபாரெக்ஸ், குழந்தையின் மென்மையான செரிக்கும் சக்திக்கேற்றவாறு விசேஷமாக முன்கூட்டியே பக்குவம் செய்யப்பட்டதாகும்.




டாக்டர்கள் சிபாரிசு செய்வது

# ஃபாரெக்ஸ்®

வழங்குவோர் **க்ளாக்ஸோ**

CASGLF-42-203 TM

தானிகள் துணை புச்சா' செய்யப்போவது வரை, அவளுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

ஊரார் வீட்டு வழக்குகளை, என்னிடம் விவரிப்பது போலத்தானே பலர் முன்னிலையில் என் தலையையும் உருட்டுவாள் என்று அவளிடம் நாங்கள் உஷாராகவே இருக்கும்படி நேர்ந்துவிட்டது.

அவளுக்குத் தெரியாமல் ஒரு டிராமா, சினிமா கூடப் பார்த்துவிடமுடியாது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

''கந்தாயி! துணிகளைக் கொஞ்சம் பார்த்துத் தோயேன்... சின்னது, அழுக்கு என்று ஏகப்பட்ட ரகளை நேற்று....''

''யாரது அழுக்குன்னது...'' அவள் போர்த் தொடுக்கத் தயாராவாள்.

''உனிக்கு முன்னடி ஜெயமோகினி வீட்ல வேலே பார்த்திருக்கேன் தெரியுமா? நான் வெளுப்பதைப் பார்த்து அந்தம்மா தெனத்திற்கும் என்ன சொல்லிக்கினே இருக்கும்... நேத்திக்கு வந்த சின்னம்மா சொல்றதை நீயும் சொல்றியாங்காட்டியும்...''

அந்த ஜெயமோகினி எப்படிப் பொறுத்துக் கொண்டாளோ ஆண்டவனுக்குத் தான் வெளிச்சம்!

அவளை அதிகப்படியாக ஒரு வேலே செய்ய விட வேண்டியதுதான்! வீட்டில் உள்ள அத்தனை பேரையும் வேலே வாங்கிவிடுவாள்!

''கந்தாயி! அந்தக் கத்தரி பாத்தியைக் கொஞ்சம் கொத்தி விடேன் என்று மாத்திரம் சொல்லிவிட்டு, நானோ குழந்தைகளோ சும்மா இருந்துவிட முடியாது....

களைக்கொத்தியை அவள் இருக்கும் இடத்திற்குக் கொண்டு வர ஒருவர், செடிகளைப் பிடித்துக் கொள்ள ஒருவர், அதன்பின் களைகளைக் கொண்டு போட ஒருவர் என்று ஒரு பட்டாளமே வேண்டும் அவள் உதவிக்கு. அதன்பின் சும்மா போவாளா?...

''யம்மாடி... இந்தக் களைகளை எடுத்து முதுகு நோவுது அம்மா! சூடா ஏதாவது கொடேன்...'' என்று கேட்டு வாங்கிச் சாப்பிட்டு விட்டு, ''இந்த அம்மா என்னிக்குத்தான் நல்ல காப்பியா போடக் கத்துக் கொள்ளுமோ... முருகா....'' என்று சுணங்கிக் கொண்டேபோவாள்.

''கந்தாயி பாலிலேயே வெண்ணே வேறு எடுக்கிறீர்களா... தேவலேயே.... புத்திசாலிதான்'', என்று, அக்கம்பக்கத்தினர் என்னைப் புகழ்கின்றனர்! விஷயம் வேறு ஒன்றும் இல்லே. தான் வேலே செய்யும் வீடுகளிலெல்லாம் தன் ஒரே ஒரு நோஞ்சான் மாட்டை வைத்துக் கொண்டு பால் வியாபாரம் வேறு செய்து கொண்டிருந்தாள் அவள். அவளைத் தவிர வேறு எவரிடமும் கைப்பால் வாங்க விட மாட்டாளே! இந்த அழகில், அந்தப் பாலேக் குடித்துத் தான் என் குழந்தைகள் ரொம்ப புஷ்டியாக வளருவதாக அக்கம் பக்கத்தில் வேறு சொல்லிக் கொள்கிறாளாம்!

வெள்ளிக்கிழமைகளில், வாசலைக் கூட நேரத்துக்கு வந்து தெளிக்காமல், சற்று வெய்யில் ஏறி, தலைக்குக் குளித்து விட்டு, முகத்தில் பளிரென்று மஞ்சளும், ஐயாபைசா அளவு குங்குமப் பொட்டுமாக அவள் வந்து நிற்கையில், ''என் சீக்கிரம் காலையில் வரவில்லே'' என்று கேட்கக் கூட பயமாக இருக்கும்!

என்ன செய்வீர்களோ... ஏது செய்வீர்களோ தெரியாது! உங்களிடம் எல்லாம் ஒப்புவித்து விட்டேன். இந்தக் கந்தாயின் பிடியிலிருந்து என்னை விடுவிக்க வேண்டியது உங்கள் பொறுப்பு... இதைத் தயவு செய்து, நான் சொன்னேன் என்று மாத்திரம் அவளிடம் சொல்லி விடாதீர்கள்...

---



**மால்பியம்:-**

**தேவையான பொருட்கள்:**

- பச்சரிசி — 2 கப்.
- உ. பருப்பு — 2 கப்.
- தேங்காய் மூடி — 1.
- சி. வெங்காயம் — அரை கிலோ.
- கருவேப்பிலே — 4 ஆர்க்.
- நல்ல நெய் — 6 டீஸ்பூன்.
- எண்ணே — அரை லிட்டர்.
- ப. மிளகாய் — 10.
- கடுகு — 1 டீஸ்பூன்.
- உ. பருப்பு — 1 டீஸ்பூன்.
- மு. பருப்பு — 10.
- கொத்தமல்லி — 1 கட்டு.
- உப்பு — தேவையான அளவு.

**செய்முறை:**

பச்சரிசியையும், உ. பருப்பையும் நன்ருக ஊற வைத்து உப்பு சேர்த்து; வெண்ணே போல் ஆட்டி எடுத்துக் கொள்ளவும்.

வெங்காயம், ப. மிளகாய் பொடி பொடியாக அரிந்து தேங்காயைத் துருவி வாணலியில் நெய் விட்டு கடுகு, உ. பருப்பைப் போட்டு, முந்திரியை சிறுசிறு துண்டங்களாக வெட்டி நெய்யில் போட்டுச் சிவக்க வறுத்து வெங்காயக் கலவையைப் போட்டு, தேங்காய்ப்பூவை போட்டுச் சிவக்க வதக்கி மாவில் கொட்டி நன்ருகப் பிசிறி வைக்கவும்.

எண்ணேயைக் காய வைத்துப் போண்டா வடிவில் போட்டுச் சிவக்க வெந்த பின் எடுக்கவும். போண்டா உள் பாகம் கூடுகூடாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் சிறிது தண்ணீர் சேர்த்துப் போண்டாவை போடவும்.

—கோவை மங்களம்.

# அனீமியா

டாக்டர். சீலரராமன் எம்.டி




**தாய்மார்கள் :–**

ஏற்கெனவே எழுதியுள்ளபடி. கருவுற்ற பெண்கள் ரத்தசோகையினல் அவதிப்படுவது மிக அதிகம். 'நேஷனல் இன்ஸ்டிடியூட் ஆஃப் நியூட்ரீஷ' னிலும், இந்தியாவின் மற்ற பகுதிகளிலும் எடுத்த எண்ணற்ற சர்வேக்களின்படி 60–80 சதவிகிதத் தாய்மார்கள் அனீமியாவினல் பாதிக்கப்படுகிருர்கள். ரத்தசோகையே பிரசவத்தின்பொழுது ஏற்படும் மரணங்களுக்கு முக்கியமான காரணம் 20–30. சதவிகிதமான மரணங்கள் கடுமையான அனீமியாவினல் தான்.

கருவுற்ற பெண்களுக்கு வளரும் சிசுவின் தேவைக்காகவும், உடலில் ஏற்படும் மாறுதல்களுக்காகவும், இரும்பு சத்தும் போலிக் ஆசிட் என்னும் வைட்டமினும் அதிகமாகத் தேவையாகிறது. இந்த அதிகப்படி தேவை உணவிலிருந்து கிடைப்பது சாத்தியமில்லை. மாத்திரைகளின் மூலமே இந்தத் தேவையைப் பூர்த்தி செய்ய முடியும். ஆனல் ஏழை வீட்டிலுள்ள பெண்கள் அறியாமையாலும், டாக்டரிடம் சரியாகப் பரிசோதனைக்குப் போகாததாலும் இச்சத்துக்களை உட்கொள்வதில்லை. தவிர அவர்களுடைய உணவிலும் இச்சத்துக்கள் போதுமான அளவில் இருப்பதில்லை. கர்ப்பம் நாளேற ஏற. சோகையும் கடுமையாகிறது.

ஏழாம் மாதத்திலிருந்து சோகையால் பீடிக்கப்பட்ட தாய்கள் சிறு வேலைகள் செய்வதற்கும் சக்தியற்றவர்களாகி விடுகிருர்கள். கொஞ்சம் நடந்தாலும் மூச்சு இரைக்க ஆரம்பித்து விடும். பிராணவாயு சிசுவிற்கும் போதுமான அளவில் கிடைக்காததனல், சிசுவின் வளர்ச்சி பாதிக்கப்படுகிறது. கடுமையான சோகையினல் குறைப் பிரசவங்கள் உண்டாக வாய்ப்பு இருக்கிறது. 10–20 சதவிகித குறைப் பிரசவங்கள் ரத்தசோகையினல் தான். தவிர பிராணவாயு அதிகம் கிடைக்கவில்லையானல், சிசு ஆரம்பத்திலேயே இறந்து போக வாய்ப்பு உண்டு. உயிருடன் பிறந்தாலும் 40–50 சத

விகித சிசுக்கள் வளர்ச்சியின்மையுடன் உள்ளன.

குழந்தைகளைப் போலவே தாய்மார்களுக்கும் Immune Mechanism குறைவாகிக் கபம் மற்றும் கிருமி வியாதிகளினால் (Infections) அதிகமாகப் பாதிக்கப்படுகிறார்கள். கருவுற்றிருக்கும்பொழுது சிசுவின் தேவைகளுக்காக சாதாரணமாகவே இருதயத்தின் வேலை அதிகமாகும். இத்துடன் ரத்தசோகையும் சேர்ந்தால் இருதயத்தின் சுமை அதிகமாகி இருதயம் பழுதடைந்து விடும். முக்கால்வாசி ரத்தசோகை மரணங்கள் பிரசவத்தின் பொழுதோ அல்லது பிரசவமான 24–48 மணி நேரங்களுக்குள்ளோ தான் நேர்கின்றன. இந்தச் சமயத்தில் கவனமாக இருப்பது மிகமிக அவசியம்.

**அனீமியாவைக் கண்டுபிடிப்பது எப்படி?**

முன்னர் கூறியபடி ஹீமோகுளோபின் ரத்தத்தின் முக்கியமான அம்சம். இதை மிக எளிதாக நிர்ணயிக்க முடியும். சாதாரணமாக ரத்தத்தில் ஹீமோகுளோபின் 12% க்கு மேல் இருக்க வேண்டும். கருவுற்ற பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் ஹீமோகுளோபின் 11% –க்குக் கீழ் குறைந்தால் அனீமியாவின் ஆரம்பம் என்று கருதலாம். 9%க்குக் கீழ் போனால் சோகை கடுமையாக இருக்கிறது என்று கருதலாம்.

தடுப்பு: சோகை ஆரம்பகாலத்தில், அல்லது கருவுற்ற 4–ஆம் மாதத்திலிருந்து தவறாமல் இரும்புச் சத்து மாத்திரைகளை உட்கொண்டு வந்தால், சோகை அதிகமாகாமல் தடுக்க முடியும். இதுதவிர சத்துள்ள கறிகாய்கள், பழங்கள், பருப்பு வகையறுக்களை அதிகமாக உட்கொண்டால் நல்லது. சோகை கடுமையாக இருந்தால், இரும்புச் சத்து இஞ்செக்ஷன்களால் உடம்பில் ஹீமோகுளோபினை அதிகமாக்க வாய்ப்பு உண்டு. ஆனால்

அருகிலுள்ள தாய்சேய் நலக் காப்பகங்களில் அல்லது மருத்துவமனையில் அல்லது கிராமங்களில் உள்ள ஆரம்ப சுகாதார நிலையங்களில் முறைப்படி பரிசோதனை செய்து கொள்வது அவசியம். இந்த சென்டர்களில் ரத்தப் பரிசோதனை செய்து ஹீமோகுளோபின் அளவு அவ்வப்போது அறிந்து கொள்ளலாம். மாதம் தவறாமல் பரிசோதனைகள் செய்துகொண்டால் விபரீதங்களைத் தடுக்க முடியும். கூடுமானவரை மருத்துவ மனையிலேயே பிரசவம் நடந்தால் தாய்–சேயின் உயிருக்கு ஆபத்துக்கள் குறைவு.

முன் காலத்தில் வீடுகளில் இரும்பு வாணலிகளும், தோசைக் கற்களும் அதிகமாக உபயோகத்தில் இருந்தன. அவைகளிலிருந்து இரும்புச் சத்து உணவுடன் கலந்து உடலில் சென்றது. இந்தக் காலத்தில் ஸ்டெயின்லெஸ் ஸ்டீலும், இண்டோலியமும் வந்து கிராமங்களில் கூட பரவி,



இரும்புப் பாத்திரங்களின் உபயோகம் வெகுவாகக் குறைந்து விட்டது.

இதேபோல் வெல்லத்தில் இரும்புச் சத்து அதிகம் உள்ளது. நாகரீகம் பரவி சர்க்கரை ஒரு கௌரவ உணவு என்று ஆகி வெல்லம் அவ்வளவாக உபயோகப்படுத்தப்படுவதில்லை. சில பழைய வழக்கங்களில் உள்ள நன்மைகளைப் புரிந்து அதைத் தொடர்ந்து வந்தால் அனீமியா போன்ற வியாதிகளை ஓரளவு கட்டுப்படுத்தலாம்.

கடந்த சில வருஷ[illegible]

# Visit Temples

ALWAYS

WITH A PACKET OF






Scented Bathies











VARIETIES TO CHOOSE

- THALAMPOO
- MULLAIPOO
- ROJAPOO
- LAVENDER
- KADAMBAM
- SUGANDA PRIYA
- AGARBATHIS

TRADE  MARK

MEANS

FLOWERY FRAGRANCE




PHONE: 25283

Mfrs:-

B·K·R·PERFUMERY

COIMBATORE-2. (S. INDIA)

Our latest introductions:

**BKR "SANDAL SUPER & SUPRADEEP"**

Incense sticks

அடைந்திருக்கிறது. கர்ப்பிணிக் குழந்தைகளைத் தவிர மற்ற மக்களுக்கும் சோகை உண்டாவது மிகவும் சகஜம்.

ஆரம்ப சோகையினால் கூட வேலை செய்யும்பொழுது அதிர்ச்சி உண்டாகும். இதனால் நிலங்களில், தொழிற்சாலையில் மற்றும் இதர அலுவலகங்களில் வேலையின் திறன் குறைந்து உற்பத்தி குறைகிறது. உடல் சோர்வு காரணமாக வேலையில் கவனக்குறைவு ஏற்பட வாய்ப்புகள் உண்டு.

என். ஐ. என்.—இல் நடக்கும் பரிசோதனைப்படி தினசரி சாப்பிடும் உப்பில் இரும்புச் சத்தைக் கலந்தால் எல்லோருக்கும் ஏற்றத்தாழ்வு இல்லாமல் சற்று அதிகமான இரும்பு, உணவின் மூலம் கிடைக்க வாய்ப்பு இருக்கிறது என்று தெரிய வந்தது. உப்பு என்பது ஏழை பணக்காரன் என்று பாகுபாடு இல்லாமல் எல்லோரும் தினசரி உட்கொள்ளும் பொருள். பரிசோதனையின் மூலம், உப்பின் நிறமும், ருசியும் மாறாமல் அதிலுள்ள இரும்புச் சத்து அதிகநாள் உப்பு வைத்திருந்தால் கெடாமல் இருக்க வெற்றியும் அடைந்தாகி விட்டது.

முதல் கட்டத்தில் நடந்த மருத்துவ பரிசோதனையில், ஹைதராபாத், டில்லி, சென்னை, கல்கத்தாவைச் சுற்றியுள்ள கிராமத்து ஜனங்களுக்கு இரும்புச்சத்து கலந்துள்ள உப்பு வழங்கப்பட்டது. இரண்டு வருஷ முடிவில் ரத்தசோகையினால் பாதிக்கப்பட்ட மக்களின் எண்ணிக்கை 60—லிருந்து முப்பது சதவிகிதத்திற்குக் குறைந்திருந்தது. இந்த உப்பு வழங்கப்படுவது நிறுத்திய ஒரே வருஷத்தில் ரத்தசோகை அதிக அளவில் காணப்பட்டது.

இன்று பாரத சர்க்கார் சென்னையிலும், குஜராத்திலும் உள்ள உப்பு ஆலைகளில் இரும்புச் சத்துள்ள உப்பை உற்பத்தி செய்யும் பிரத்யேகமான முயற்சியில் ஈடுபட்டுள்ளது. இந்த முயற்சி வெற்றி பெற்றால் அடுத்த பத்து வருஷங்களில் இந்நாட்டிலிருந்து ரத்தசோகை பெருமளவில் மறைந்து விடும்.

# இம்மாத இல்லத்தரசி போட்டி

**பொருள்:** புதுமையான காலை டிபன்

**முடிவு தேதி:** 15-1-'84

## சமையல் கூப்பன்

................ என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும்

# குளிரில் சருமப் பாதுகாப்பு

குளிர்காலம் விரைவாக வந்துகொண்டிருக்கிறது. சிலருக்குச் சருமம் வறண்டு இருக்கும். சிலருக்கு சருமத்தில் எண்ணெய் வழியும். இதற்கு என்ன செய்யலாம் என்று கன்யா அழகு நிலையத்தின் உரிமையாளர் திருமதி லதா மோஹன் அவர்களைக் கேட்டபோது—

சருமம் வறண்டு இருந்தால், பால் ஏட்டில் சில துளிகள் எலுமிச்சைச் சாறு கலந்து நன்றாகக் குழைத்துப் படுக்கப் போகுமுன் முகத்தில் தடவிக் கொண்டு படுத்துக் கொள்ளவும். மறுநாள் காலை எழுந்ததும் குளிர்ந்த நீரில் முகத்தை நன்கு அலம்பவும்.

கிளிசரின், எலுமிச்சைச் சாறு பன்னீர் மூன்றையும் சம அளவில்



கலந்து வைத்துக் கொண்டு தினமும் முகத்தில் தடவி வரலாம். இதுவும் நல்ல பலனளிக்கவும். இவை நீங்களே வீட்டில் செய்து கொள்வது. இல்லாவிட்டால் கடையிலிருந்து ஹேண்ட் அண்டு பாடி க்ரீம், மாயிஸ்சரைசர் (Moisturiser) அல்லது நல்ல தயாரிப்பாளரின் க்ரீம் வாங்கி முகத்தில் தடவிக் கொள்ளலாம்.

எண்ணெய் சருமமாக இருந்தால்

முகப்பருவைக் கூட இந்த ஸ்டீமிங் முறையால் குணப்படுத்தலாம். கறுப்பாக இருக்கும் முனை இந்த முறையில் வெளி வந்துவிடும். சிலருக்குச் சிவப்பாகப் பெரிது பெரிதாக இருக்கும் பருவையும் குணப்படுத்தலாம்.

முகப்பரு வருவதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. பரம்பரையாக சிலருக்கு இருக்கும். இதுதவிர பொடுகு, மலச்சிக்கல், இறுக்கமான மனச்சூழ்நிலை இவற்றின் காரணமாகவும், அதிகமான எண்ணெய் மற்றும் கொழுப்புப் பண்டங்களைச் சாப்பிடுவதாலும் பருக்கள் வரலாம். இவற்றை ஆகாரத்திலிருந்து நீக்கி நிறைய கீரைகள், பழங்கள் சாப்பிட்டு மலச்சிக்கலைத் தடுத்து மனதையும் உடலையும் ஆரோக்கியமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

முகத்திற்குக் கொடுக்கும் முக்கியத்துவத்தில் பாதியாவது கழுத்து, கை, கால்களுக்கும் கொடுக்க வேண்டும். ஆலிவ் ஆயில் அல்லது வேறு எண்ணெய் தேய்த்துச் சருமத்தை

அதிக வருமானம்

ஆயுள் பாதுகாப்பு

விபத்து பாதுகாப்பு

# ULIP

## உங்கள் குடும்ப நலனைக் கருதி நான்கு நன்மைகள் பயக்கும் முதலீட்டுத் திட்டம்

யூனிட் லிங்க்ட் இன்சூரன்ஸ் ப்ளான் (ULIP) பற்றித் தெரிந்து கொள்ள இதுவே சமயம்!

நீங்கள் முதலீடு செய்யும் தொகைக்கு வரிச் சலுகை கிடைக்கிறது. இலக்குத் தொகைக்குச் சமமாக உங்களுக்கு ஆயுள் இன்சூரன்ஸ் பாதுகாப்பு கிடைக்கிறது. மருத்துவ சோதனை தேவையில்லை.

மேலும் ரூ. 15,000 பெறுமான விபத்து இன்சூரன்ஸ் பாதுகாப்பும் உண்டு.

எல்லாவற்றிற்கும் மேலாக, உங்கள் முதலீடு அதிக வருவாயைத் தருகிறது.

ULIP அளிக்கும் நன்மைகளை நீங்களே பாருங்கள்.

| சேமிப்புக் காலம் | ஆண்டுதோறும் செலுத்தவேண்டிய தொகை | இலக்குத் தொகை | முடிவில் பெறும் தொகை |
|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. |
| 10 வருடங்கள் | 1200 | 12,000 | 19,000 |
| 15 வருடங்கள் | 800 | 12,000 | 24,500 |

உங்கள் வயது 18 லிருந்து 45) வரை இருந்தால் நீங்கள் ULIP திட்டத்தில் சேரலாம். உங்கள் இலக்குத் தொகை குறைந்தபட்சம் ரூ. 3000 ஆகவும் அதிகபட்சம் ரூ. 12,000 ஆகவும் இருக்க வேண்டும். சேமிப்புக் காலம் 10 வருடமோ அல்லது 15 வருடமோ இருக்கலாம். நீங்கள் இத்திட்டத்தில் சேர்ந்த மூன்று வருடத்திற்கு பிறகு ரூ. 12,000 பெறுமானமுள்ள மற்றும் ஒரு ULIP திட்டத்தில் சேரலாம்.

இதர விபரங்களுக்கு எங்கள் ஏஜெண்டுகள், தலைமைப் பிரதிநிதிகள் மற்றும் பாங்க் ஆப் பரோடாவின் கிளைகளை அணுகுங்கள்.



## யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா

(ஒரு பொதுத் துறை நிதி நிறுவனம்)
தலைமை அலுவலகம் : பம்பாய்.
பிராந்திய செயலகம் : தெற்கு மண்டலம்,
46 செகண்ட் லைன் பீச், சென்னை-600 001 போன் : 27433

தமிழ் நாட்டிலுள்ள எங்கள் முக்கிய பிரதிநிதிகள்:

• கோவை, பெரியார், நீலகிரி மாவட்டங்களுக்கு : திரு ஏ. தனபால், 30, நாராயணகுரு ரோடு, கோவை-641 018. போன் : 34776 (அலு) • மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களுக்கு : திரு எம். இராமமூர்த்தி, 30. எல்.ஐ.சி. காலனி, மதுரை-625 002 போன் : 30160 (அலு) • சேலம் மாவட்டத்திற்கு : திரு என்.கே. இங்கர்சால், 155, கவர்னர்ஸ்பிள்ளை தெரு, அன்னதானப்பட்டி, சேலம்-636 002 போன் : 64302 (வீடு) • தஞ்சை மாவட்டத்திற்கு : திரு கு. முத்துசாமி, 52-ஏ, வ.உ.சி. நகர், தஞ்சை-613 007 போன் : 1224 (வீடு) • நெல்லை, குமரி மாவட்டங்களுக்கு : திரு எம்.எம். காஜா, பாக்காளி பில்டிங் அனெக்ஸ், 41, திருவனந்தபுரம் நெடுஞ்சாலை, பாளையங்கோட்டை-627 002. போன் : 4520 (அலு). 5395 (வீடு)

**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்.**

Sista's UTI 152/83 TM

# ப்ரிட்ஜ், மிக்ஸி பாதுகாப்பது எப்படி?



ஃப்ரிட்ஜை சுவற்றிலிருந்து 10 முதல் 12 அங்குலம் தள்ளி வையுங்கள். அப்போதுதான் குளிர்ப்பதனம் செம்மையாக நடக்கும்.

2. எர்த் கனெக்ஷன் தனியாகக் கொடுக்கப்பட வேண்டும். எர்த் கனெக்ஷன் சரியாக உள்ளதா என எலக்ட்ரீஷியனைக்கொண்டு அடிக்கடி சரிபார்க்கவும்.

3. வேண்டிய பொருள்களை உள்ளேயிருந்து எடுத்தபின் உடனடியாக ப்ரிட்ஜ் கதவை மூடி விடுங்கள்.

4. ஐஸ் ட்ரேயின் அடிப்பாகத்தில் (வெளிப்புறம்) சிறிது நல்லெண்ணெய்தடவிவிட்டுப் பிறகு உள்ளே தண்ணீர் ஊற்றிவைத்தால் ஐஸ் ஆனவுடன் ட்ரேயை அசைத்து எளிதாக எடுக்க முடியும்.

5. ஐஸ் ட்ரேயை எளிதாக அசைத்து எடுக்க முடியவில்லையானால் கத்தி, தோசைக் கரண்டி போன்ற கூர்மையான பொருட்களை உபயோகிக்காதீர்கள். சிறிது தண்ணீர் ஊற்றி ப்ரிட்ஜை அணைத்து வைத்தால் தானே இளகி வரும்.

6. வெயில் காலத்தில் 5 நாட்களுக்கு ஒரு முறையும் குளிர் காலத்தில் 3 நாட்களுக்கு ஒரு முறையும் டீஃப்ரோஸ்ட் (defrost) செய்ய வேண்டும்.

7. கீரை மற்றும் பச்சைக் காய்கறிகளை நன்றாகக் கழுவியபின் பாலிதீன் கவரில் போட்டு வாயை இறுகக் கட்டி வெஜிடபிள் ட்ரேயில் போட்டு வைக்கவும். வெங்காயத்தைப் பாலிதின் கவரில் போட்டு வைத்திருந்து பிறகு உரித்தால் கண் எரியாது. கிழங்குகளை ப்ரிட்ஜில் போட்டு வைக்காதீர்கள்.

8. பிளாஸ்டிக் பாட்டில்களில் நீர் ஊற்றி வைக்கவும். கண்ணாடிப் பாட்டில்களை வைத்தால் கதவின் பேனல் கெட்டுவிடும்.

9. வோல்டேஜில் ஏற்றத்தாழ்வு இருந்தால் ப்ரிட்ஜை அணைத்து விடுங்கள்.



10. மென்மையான துணியையே துடைப்பதற்கு உபயோகிக்கவும்.

11. வெளியூர் போகும்போது மறக்காமல் ப்ரிட்ஜை அணைத்து வையுங்கள்.

12. ப்ரிட்ஜ் ஆட்டோமேடிக்காக, 'ஆஃப்' ஆகி 'ஆன்' ஆகிறதா எனக் கவனிக்கவும். 'ஆஃப்' ஆகாமலே ஓடிக் கொண்டிருந்தால்

மெக்கானிக்கை அழைத்து செக் செய்யுங்கள்.

## மிக்ஸிக்கும் சில யோசனைகள்

1. எந்த மிக்ஸியும் தொடர்ச்சியாக வெகுநேரம் ஓட்டப்படக் கூடாது.
2. தேங்காயைத் துருவியே போட்டு அரைக்கவும். பத்தைகளாகப் போட வேண்டாம். அப்படிப் போட நேர்ந்தாலும் பத்தைகளை சிறு துண்டுகளாக நறுக்கிப் போடவும்.
3. மஞ்சள், கோதுமை, எள், சர்க்கரை போன்றவற்றை அரைத்தால் ஜார் பழுதாக நேரலாம்.
4. எந்த மிக்ஸியிலும் வெட் கிரைண்டிங் (அல்லது ஜூஸ்) செய்து முடித்தபின் நீரூற்றி அலம்பி, பின் வெறும் ஜாரை மோட்டாரில் வைத்து 10 வினாடிகள் ஓட்டியபின், ஜாரை எடுத்துக் கவிழ்த்து வைத்து விடுங்கள்.
5. அடிப்பாகம் கழற்றக் கூடிய மிக்ஸியாயின் உபயோகித்தபின் உடனே கழற்றி அலம்பி வைத்து விடுங்கள்.
6. மேற்கூறிய வகை ஜார்களை கழற்றாமல் உபயோகித்தால், மிக்ஸி பழுதாவதுடன், அடிப்பாகத்தில் ஒருவித ரசாயனப் பொருள் (ஆக்ஸைடு) பிடித்து, உடல் நலத்திற்கு ஊறு விளைவிக்கும்.



7. வெட் கிரைண்டிங் செய்யும் போது ஜாரில் மூன்றில் ஒரு பாகம் தான் நிரப்ப வேண்டும். உம்:— அரிசி, உளுந்து.
8. உளுந்து அரைக்கும் போது மோட்டாரை அடிக்கடி 'ஆஃப்' செய்து கிளறிவிடவும். இல்லையென்றால் உளுந்து கெட்டியாகி மோட்டார் பழுதாகலாம்.
9. வெட் கிரைண்டிங் செய்தபின் ஜாரிலிருந்து தண்ணீர் லீக் ஆகிறதா என அடிக்கடி கவனித்துக் கொள்ளுங்கள்.



10. உலர் அரவை செய்யும்போது, சாதாரண மிக்ஸிகளை மூன்று நிமிடத்திற்கு மேல் ஓட்டாதீர்கள்.
11. டெல்லி மிக்ஸி போன்றவற்றை வைத்திருப்பவர்கள் அரிசி உளுந்து, போன்றவற்றை அரைக்க வேண்டாம். அப்படி அரைக்க நேர்ந்தால் அரை நிமிடத்திற்குஒருமுறைஅணைத்து மூன்றிலிருந்து ஐந்து நிமிடம் பொறுத்து மறுபடியும் அரையுங்கள்.
12. எந்த மிக்ஸியையும் பொருத்தியபின், மேல்மூடியில் கையை அழுத்தமாக வைத்துப்பிடித்துக் கொண்டு பின் அரைத்தல் நல்லது.
13. முக்கியமாக குழந்தைகள் கைக்கெட்டாமல் மிக்ஸியைஎடுத்து வைப்பது நல்லது.

தகவல்: வீனஸ் பிரீட்ஜஸ் & மிக்ஸீஸ்
சென்னை-33.




இம்மாதம் பரிசுகளை அளிப்பவர் :

**ஸ்ரீமதி G. பாலா**

கல்கி, மங்கையர் மலர், கோகுலம் ஏஜண்டு

17. வடக்கு ரத வீதி

கைலாசபுரம்

திருநெல்வேலி ஜங்ஷன்




# இம்மாத இல்லத்தரசி

முதல் பரிசு: அடுக்கு

## கதம்பத் தயிர்க் கூட்டு:

**தேவையான பொருள்கள்**

காரட், பீன்ஸ், பீட்ரூட், உருளைக் கிழங்கு. ஒவ்வொன்றும் 200 கிராம்.
பெரியவெங்காயம், தக்காளி, பச்சைப் பட்டாணி — ஒவ்வொன்றும் 250 கிராம்.
தேங்காய் — அரை மூடி அல்லது 4 பத்தைகள்.
ஏலக்காய் — 5.
கொத்தமல்லி — 1 கட்டு.
பச்சைமிளகாய் — 5
இஞ்சி — சிறிய துண்டு

பரிசு பெற்ற குறிப்புக்களைத் தேர்ந்தெடுத்தவர்கள்:

**மங்கையர்க்கரசி மகளிர் மன்றம்.**

சாஸ்திரி நகர், சென்னை-20.



பிரெட் — 5 ஸ்லேஸ்.
தயிர் — 2 கப்.
கடுகு, உளுத்தம்பருப்பு, எண்ணெ — தாளிக்கத் தேவையானது.
உப்பு, மஞ்சள் தூள் — தேவைக்குத் தகுந்தாற் போல்.

**செய்முறை:**

முதலில் காய்களை நன்றாகக் கழுவி சிறிய துண்டுகளாகச் செய்து கொள்ளவும்.
பிரெட் ஸ்லேஸ்களை சிறிய துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும்.
தேங்காய், பச்சை மிளகாய், இஞ்சி, ஏலம் முதலியவைகளைச் சேர்த்து அரைத்துக் கொள்ளவும்.
காய்களை சிறிது உப்பும், மஞ்சள் தூளும் சேர்த்து வேக வைத்து வடிகட்டி வைத்துக் கொள்ளவும். ஒரு வாய் அகன்ற பாத்திரத்தில் எண்ணெ (அ) டால்டாவை விட்டு நன்றாக காய்ந்த பின் பிரெட் துண்டுகளை ரோஸ்டு செய்து எடுத்து வைக்கவும். பிறகு அதே பாத்திரத்தில் கடுகு, உளுத்தம்பருப்புஎண்ணெ விட்டுத் தாளித்து எடுத்து வைக்கவும். பிறகு கொஞ்சம் எண்ணெ விட்டு வெங்காயத்தை நன்றாக வதக்கவும். நன்றாக வதங்கியபின் தக்காளியை அதில் போட்டு அதுவும் நன்றாக வதங்கும் வரை கிளறவும். வதங்கிய பின் பாத்திரத்தை கீழே இறக்கி ஆறியபின் அதில் வேக வைத்த காய்கறி, பிரெட் ரோஸ்டு, தாளித்த கடுகு, உளுத்தம்பருப்பு, தேங்காய் அரைத்த விழுது, தயிர், கொத்தமல்லி, தேவையான உப்பு போட்டு நன்றாக கலக்கவும். இதுவே கதம்பத் தயிர்க் கூட்டு.
குறிப்பு: (வேறு காய்கறிகளை உபயோகிக்கும் பொழுது தண்ணீர் விட்டுக் கொள்ளும் காய்கறிகளை உபயோகிக்கக் கூடாது.)

நெய்வேலி—3. -எஸ். காந்திமதி.

இரண்டாம் பரிசு:
எவர்சில்வர் வெங்கலபானை

## விகோடால்

**தேவையான பொருட்கள்:**

சௌசௌ — 1 (ஒன்று)
காரட் — 100 கிராம்.
அவரைக்காய் — 100 கிராம்.
துவரம் பருப்பு — 150 கிராம்.
பாசிப் பருப்பு — 2 மேஜைக்கரண்டி.
கடலைப்பருப்பு — 1 மேஜைக் கரண்டி.
தட்டைப்பயிறு — 1 மேஜைக் கரண்டி
வறுத்து தோலெடுத்த நிலக்கடலைப் பருப்பு 1 மேஜைக்கரண்டி.
பச்சை மிளகாய் — 5
சிறு சீரகம் — 1 தேக்கரண்டி.
வற்றல் மிளகாய் — 2
கடுகு, உளுத்தம்பருப்பு — 1 தேக்கரண்டி.
கருவேப்பிலை — தேவையானது.
சின்ன வெங்காயம் — 4.
எலுமிச்சம்பழம் — அரை பழம்.
தேவையான உப்பு.
எண்ணெய் — 2 மேஜைக்கரண்டி.
தேங்காய்ப்பால் — 1 கப்.
மஞ்சள் பொடி — சிறிது.

**செய்முறை:**

காய்களை முழுதாக அலம்பி, தோல்சீவி சிறுதுண்டுகளாக நறுக்கிக் கொள்ளவேண்டும். வெங்காயத்தை நீளவாக்கில் மெல்லியதாக நறுக்கி வைத்துக் கொள்ளவேண்டும். கடலைப்பருப்பு, பாசிப் பருப்பு, தட்டைப் பயிறு இவற்றை லேசாக வறுத்துக்கொள்ள வேண்டும். பச்சை மிளகாய், சீரகம் இவற்றை நன்கு அரைத்து அத்துடன் நிலக்கடலைப் பருப்பு வைத்து நறநறவென்று அரைத்து எடுத்துக் கொள்ளவேண்டும்.
குக்கரில், மஞ்சள்பொடி உப்பு கலந்த காய்களை ஒரு அடுக்கிலும், துவரம் பருப்பை இரண்டாவது அடுக்கிலும் வேறொரு அடுக்கில் வறுத்த பருப்பு வகைகளையும் தேவையான நீர் சேர்த்து வேக வைத்து எடுத்துக் கொள்ள வேண்டும். வெந்த காய்களுடன், மசித்த துவரம் பருப்பையும், மசிக்காத மற்ற பருப்புகளையும், அரைத்த விழுதையும் தேவையான உப்புடன் கலந்து மூன்று நிமிடங்கள் கொதித்தபின் தேங்காய்ப் பால் ஊற்றி கொதி வந்ததும் இறக்கி வைத்து எலுமிச்சஞ்சாறு கலந்து மூடி வைக்கவேண்டும்.
வாணலியில் எண்ணெய் விட்டுக் காய்ந்ததும், கடுகு, உளுத்தம்பருப்பு, வற்றல் மிளகாய் இட்டு வெடித்ததும் அதில் வெங்காயத்தைப் போட்டு வதக்கி பொன்னிறமானதும் கருவேப்பிலை சேர்த்துத் தாளித்து கூட்டில் கொட்டிக் கிளறி விட வேண்டும். சாதம் சப்பாத்திக்கு ஏற்ற சுவையான கூட்டாகும்.

இருச்சி—8. எம். எஸ். நிர்மலா.

மூன்றும் பரிசு: பால் சொம்பு

## பஹாரா பைங்கன்:

**தேவையான பொருட்கள்:**

கத்தரிக்காய் கால் கிலோ
தக்காளி — நான்கு.
வெள்ளை எள், தனியா, உரித்த வேர்க்கடலை, கசகசா ஒவ்வொன்றும் 50 கிராம்.
பட்டை, லவங்கம் (ஒவ்வொன்றும் இரண்டு).
பெரிய வெங்காயம் — நான்கு.
காரப்பொடி — இரண்டு ஸ்பூன்.

**செய்முறை:**

கத்தரிக்காய், தக்காளி, வெங்காயம் இவை மூன்றையும் சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். அடுப்பில் வாணலியை வைத்து என், தனியா, வேர்க்கடலை, கசகசா எல்லாவற்றையும் தனித்தனியாக வறுத்துக் கொள்ளவும். இவைகளுடன் பட்டை, லவங்கத்தையும் சேர்த்துப்பொடி செய்து கொள்ளவும். இத்துடன் நறுக்கி வைத்த வெங்காயத்தையும் சேர்த்து சிறிது தண்ணீர் விட்டு மிக்ஸியில் அரைத்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெ வைத்து அரைத்த விழுதைப் போட்டு நன்றாக வதக்கவும். சுருண்டு வந்ததும் கத்தரிக்காய், தக்காளி இவற்றையும் சேர்த்துக் கொள்ளவும். பிறகு தேவையான அளவு உப்பு, காரப்பொடி இவைகளையும் கலந்து சிறிது தண்ணீர் விட்டு நன்றாகக் கொதிக்க வைக்கவும். கத்தரிக்காய் வெந்ததும் இறக்கி விடலாம். இதுவே 'பஹாரா பைங்கன்.'

இட்லி, தோசை, சப்பாத்தி இவைகளுக்குத் தொட்டுக் கொள்ள நன்றாக இருக்கும். பருப்பு, தேங்காய் இவைகள் சேர்க்கப் படாததால் ரொம்ப நேரம் ஊசிப்போகாமல் இருக்கும்.

பெங்களூர்–8. -சரோஜா ராமச்சந்திரன்.

ஆறுதல் பரிசு: சொம்பு

## பல கறி பருப்புக் கூட்டு:

**தேவையான பொருட்கள்:**

துவரம்பருப்பு – 200 கிராம்.
பாசிப்பருப்பு – 100 கிராம்.
கடலைப்பருப்பு – 50 கிராம்.
கொத்துக்கடலை – 50 கிராம்.
காராமணி – 50 கிராம்.
நிலக்கடலை – 50 கிராம்.
மிளகாய்ப்பொடி – 2 டீஸ்பூன்.
மஞ்சள்பொடி – 2 சிட்டிகை.
கடுகு – 1 டீஸ்பூன்.
வெள்ளை உளுத்தம்பருப்பு – 1 டீஸ்பூன்.
எண்ணெய் – 100 மில்லி.
காய்கறிகள் பாகற்காய் நீங்கலாக எல்லாக் காயும் மொத்தம் சுமார் 1 கிலோ.
கீரை வகைகள் அகத்திக் கீரை நீங்கலாக எல்லாக் கீரையும் அரை கிலோ.
பச்சைமிளகாய் – 10
தக்காளிப் பழம் – கால் கிலோ.
வெங்காயம் – கால் கிலோ.
எலுமிச்சம்பழம் – 2.
தேங்காய் மூடி. – 1.
ருசிக்குத் தகுந்த அளவு உப்பு.
கறிவேப்பிலை – 1 கொத்து.

**செய்முறை:**

கொத்துக் கடலை, காராமணி, நிலக்கடலை ஆகியவற்றை 5 மணி நேரம் தண்ணீரில் ஊற விட வேண்டும்.

துவரம் பருப்பு, பாசிப் பருப்பு கடலைப் பருப்பு மூன்றையும் ஒன்றாகச் சேர்த்து முக்கால் பதத்தில் வேக வைத்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

காய்களையும், கீரைகளையும் சிறு, சிறு துண்டுகளாக தனித்தனியே நறுக்கி வைத்துக் கொள்ள வேண்டும்.

பச்சை மிளகாய்களை இரண்டு இரண்டாகக் கீறி வைத்துக் கொள்ளவேண்டும். வெங்காயம், தக்காளியைப் பொடியாக நறுக்கிக் கொள்ள வேண்டும்.

முதலில் அடிகனமுள்ள வாய் அகன்ற பாத்திரத்தில் 50 கிராம் எண்ணெய் விட்டு நறுக்கி வைத்துள்ள பச்சை மிளகாய் வெங்காயம், தக்காளியைப் போட்டு வதக்கி, அதிலே ஊற வைத்துள்ள கடலை வகைகளையும் போட வேண்டும். பிறகு நறுக்கிய காய்கறிகளைப் போட்டு சிறிது நேரம் வதங்கிய பின் மஞ்சள் பொடி, மிளகாய்ப் பொடி உப்பு போட்டு வேக தேவையான அளவு தண்ணீர் ஊற்றி மூட வேண்டும்.

வெந்தபின் நறுக்கி வைத்துள்ள கீரைகளைப் போட வேண்டும். 10 நிமிடம் கழித்து வேக வைத்துள்ள பருப்பு வகைகளை போட வேண்டும்.

தேங்காயைத் துருவிப் போட்டுக் கிளறி விட வேண்டும். கடுகு, உளுத்தம்பருப்பைப் பொறித்துக் கறிவேப்பிலையுடன் கூட்டில் போட வேண்டும்.

அதிக கெட்டியும் தண்ணீரும் இல்லாத தளதள பக்குவத்தில் இறக்க வேண்டும்.

இறக்கியபின் எலுமிச்சம் பழத்தைப்பிழிய வேண்டும்.

நாக்பூர். -வி. வஸந்தா.

ஆறுதல் பரிசு: சொம்பு

## கைமா கூட்டு:

**தேவையான பொருட்கள்:**

கொத்துக்கறி – கால் கிலோ.
பச்சைப்பட்டாணி உரித்தது – ஒன்றரை கப்.
துருவிய தேங்காய் – 1
நீளமாக வெட்டிய பெரிய வெங்காயம்–2.
சிறிய பச்சை மிளகாய் – 9
இஞ்சி – 1 சிறிய துண்டு.
நசுக்கிய பூண்டு – பல் – 12.
பட்டை, பெருஞ்சீரகம், ஏலப்பொடி –

பொடித்தது — ஒன்றரை ஸ்பூன்.
தக்காளி பெரியது — 2.
நெய் — 2 டேபிள் ஸ்பூன்.
எலுமிச்சம்பழம் — அரை மூடி.
கொத்தமல்லி — 1 கட்டு.
ஒன்றிரண்டாக உடைத்த கோதுமை — கால்கப்.

**செய்முறை :**

கொத்துக்கறியை சுத்தம் செய்து, இஞ்சி, பூண்டு நசுக்கிப்போட்டு, மஞ்சள் பொடி சேர்த்து குக்கரில் வேகவிடவும். தக்காளியை சுத்தமாகக் கழுவி, கொதிக்கும் நீரில் 5 நிமிடம் போடவும். பிறகு தோலை உரித்துவிட்டு, குழம்பா க் கடையவும். துருவிய தேங்காயில் 1 கப் கொதித்த நீர் ஊற்றி முதல் பாலை எடுத்துத் தனியே வைக்கவும். மீண்டும் 2 கப் நீர் விட்டு இரண்டாம் பால் எடுக்கவும்.

ஒரு வாணலியில் நெய் ஒரு ஸ்பூன் விட்டு மசாலாப் பொடிகளைப் போடவும். சிவந்து வாசனை வந்ததும் பச்சை மிளகாய், வெங்காயம், மீதி பூண்டை வதக்கவும். பின்பு இரண்டாம் (தேங்காய்) பாலை ஊற்றவும். பட்டாணியையும் இதில் கொட்டி வேக விடலாம். பட்டாணி,பாதி வெந்ததும், வெந்த கொத்துக் கறி, தக்காளி குழம்பு, உப்பு, சிறிது மிளகாய்ப்பொடிப் போட்டுக் கிளறி மூடவும். சிறிது நேரம் சென்று கோதுமை ரவையை சிறிது சிறிதாக தூவி நன்கு கிண்டவும். இரண்டு கொதி கொதித்ததும், முதல் பாலை ஊற்றி, கொத்தமல்லி போட்டு இறக்கவும். ஆறியதும், சில துளிகள் எலுமிச்சம்பழச் சாறு பிழியவும்.

**சைவ உணவுக்காரர்கள் கறிக்குப் பதிலாக:**

1 கப் மைதாவைச் சலித்து, சிறிது, உப்பு, மிளகாய்ப்பொடி, நெய், சோடா மாவு கலந்து கெட்டியாகப் பிசைத்து அரைமணி நேரம் ஊற விடவும். இதை 1 விரல் பருமன், 1 விரல் நீளத்திற்கு உருளைபோல் செய்து ஆவியில் வேகவிடவும். பின்பு இதை கத்தியால் சதுரங்களாக வெட்டி எண்ணெயில் பொன்னிறமாகப் பொறித்து, கொதிக்கும் கூட்டில் போடலாம். இது சப்பாத்தி, பூரிக்குத் தொட்டுக் கொள்ளும் ஒருவகைக் கூட்டு. இதை புதிதாக சாப்பிடுபவர்கள் மைதா சதுரங்கள் என்று சொன்னால் நம்ப மாட்டார்கள். கறித் துண்டுகள் போலவே இருக்கும்.

பழையனூர். —திருமதி ராமச்சந்திரன்

# ஆண்டாள் மணக்கும் மதுரை!

'இளைய தலைமுறையினர் வழி தவறிப்போய் விடுவார்களோ' என்று தாய்மார்களைப் பயப்பட வைக்கும் கவர்ச்சிகளிலிருந்து மீட்டுப் பக்தி வழியில் செல்லுகிறது மதுரையம்பதி! இதற்கு ஆதாரமாக இருந்தவர் திருமதி ராஜம்மாள் சுந்தரராஜன். அவருக்குப் பிறகு இப்போது திருமதி விசாலாட்சி!

படத்தில் கூடியிருக்கும் கூட்டமே இவர்களுடைய சாதனையைக் கூறுகிறது. இருபது பெண்களைக் கொண்டு முப்பது ஆண்டுகளுக்கு முன் தொடங்கிய இலவச இசைப் பள்ளி இன்று ஆலமரமாய்த் தழைத்திருக்கிறது. மார்கழி மாதம் மதுரையெங்கும் திருப்பாவை திருவெம்பாவை மணக்கிறது. மற்ற நாட்களில் பக்தி நெறி ஊட்டும் திரைப் படங்களும், நாட்டிய நாடகங்களும், நடனமும்,பாட்டும் கலகலப்பூட்டுகிறது.

பக்தியையும், கலாச்சாரத்தையும் பண்பாட்டையும் அஸ்திவாரமாகக் கொண்டு மற்ற ஊர்களுக்கும் வழிகாட்டியாக இந்தப் பெண்கள் மன்றம் மதுரையில் கொடி கட்டிப் பறக்கிறது! அன்னை மீனாட்சியின் ராஜ்யமல்லவா?

குன்றக்குடி பெரிய பெருமாள்



## இதோ வந்துவிட்டது! இந்தியாவின் மிக இலேசான இஸ்திரிப் பெட்டி. மற்றவற்றை மிஞ்சும் செயல் திறனுடையது.

# ஸ்:பியர்ஹாட்

### ஆட்டோமேட்டிக் இஸ்திரிப் பெட்டி, டெ:ப்லான் கோட்டிங் செய்யப்பட்டது.

ஸ்:பியர்ஹாட் இங்கு இருக்கும் பொழுது இனி வெளிநாட்டு இலேசான இஸ்திரிப் பெட்டிகளை தேடவேண்டியதில்லை.
ஸ்:பியர்ஹாட் ஆட்டோமேட்டிக் இஸ்திரி வாங்க பல நல்ல காரணங்கள் இங்கே தருகிறோம்:

- சூடுபிடிக்கக் குறைந்த நேரம். மின்சாரத்தில் சிக்கனம்.
- மிக இலேசானது. எடை—ஒரு கிலோ கிராமுக்கும் குறைந்தது. ஆகவே விரைவாக இஸ்திரி செய்யலாம்.
- டெ:ப்லான் தடவிய அடிப்பாகம் உங்கள் துணிகளைப் பாதுகாக்கிறது. துருக்கறை மற்றும் கருகிய தடம் ஏற்படுவதில்லை.
- அடிப்பாகம் முழுவதும் சமமான சூடு. தரமான, உயர்ரக, டியூபுலர் ஹீட்டிங் எலிமென்டே இதற்குக் காரணம்.
- ஸ்நாப் ஆக்ஷன் தர்மோஸ்டாட் உங்கள் டிவி, ரேடியோவில் ஒலித் தடங்கல் ஏற்படுத்தாமல் தவிர்க்கிறது.
- எளிதான மின்வொயர் அசைவுக்கு ஏற்றவாறு ரோட்டரி ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது.
- சூடு ஏறாத கைப்பிடி. பிடிக்க மிகவும் வசதியானது.

மாடல்
:பெதர்லைட்




விற்பனை ஏற்பாடு:




பாட்லிபாய் & கம். லிட்.,

ஸ்:பியர்ஹாட் :பெதர்லைட் பயன்படுத்தி உங்கள் பொன்னான நேரத்தைக் குறைத்திடுக.

CHAITRA-BB-209 TAM

# எல்லைகளின் விளிம்பில்

வாஸந்தி

சட்டென்று மனத்தில் இறுக்கம் தளர்ந்து போனாற்போல் இருந்தது. இளம் நிலவாய் எட்டிப் பார்க்கும் எதிர்பார்ப்புகள். ஏக்கத்தில் ஏமாந்து சோர்ந்து மனசின் மூலையில் சுருண்டு படுத்திருந்த எதிர்பார்ப்புகள் தட்பென்று ஸ்பிரிங் சுருளை விரித்தமாதிரி முன்னால் பாய்ந்தன.

நேர்முகத் தேர்வுக்கான அழைப்பு. அழகாக நீட்டாக டைப் அடிக்கப்பட்ட கடிதம். அங்கிருந்த பின்குறிப்புதான் மனசை அப்படிப் பறக்க விட்டது.

''தகுதியை வைத்தே வேலைகொடுக்கப் படும். எந்த வித சிபாரிசுக் கடிதமும் கொண்டு வரக் கூடாது...''

கடிதத்தைத் திரும்பத் திரும்பப் படிக்கையில் இதில் எத்தனை தூரம் உண்மை இருக்கும் என்கிற யோசனையும், இதுவும் ஒரு கண் துடைப்புத்தானோ என்கிற அனுமானமும் எழுந்தது.

''யார்கிட்டேந்து கடுதாசிடா அது?''

ஏன் என்று புரியாத ஒரு சோர்வு ஏற்பட்டது.

''ஒரு இண்டர்வ்யூவுக்கு கார்டு வந்திருக்கு.''

அம்மா புருவத்தைச் சுருக்கிக் கொண்டு பார்த்தாள்.

''அதுக்கு ஏன் மூஞ்சியை சுரத்தில்லாமே வெச்சுக்கறே?''

அவன் அலுப்புடன் சிரித்தான்.

''இந்த மாதிரி எத்தனை இண்டர்வ்யூ லெட்டர் வந்தாச்சு!''

''அதுக்காக? வேலை கிடைக்காதுங்கற நிச்சயத்தோட நீ போறதினாலேதான் அவா உன்னை செலக்ட் பண்றதில்லே!''

அம்மாவின் பேச்சில் இருந்த விநோதமான வியாக்யானங்களுக்கு பழகிப்போன காரணத்தினால் அவன் பேசாமல் அமர்ந்திருந்தான்.

''சுவாமி மேலே பாரத்தைப் போட்டு தைரியமா போ. நா வெங்கடாசலபதிக்கு வேண்டிக்கிறேன். நல்லபடியா நடக்கும்!''

அப்படியானால் இத்தனை நாளும் நீ வேண்டிக் கொள்ளவில்லையா என்று கேட்க நினைத்து அவன் சிரித்தான்.

''உன் வெங்கடாசலபதிக்கு காது கேட்காது. ரொம்ப தூரத்திலே இருக்கார்.''

''அண்ணனுக்கும் தங்கைக்கும் நன்னா வாதம் பண்ணத் தெரியும். வேறே ஒண்ணும் தெரியாட்டாலும்!''

வேறு என்ன தெரிய வேண்டும்? அவன் இதுவரை அம்மாவைக் கேட்டதில்லை. அம்மாவுக்கும் அதற்குப் பதில் சொல்லத் தெரியுமா என்பது சந்தேகம்.

இந்த நான்கு மாதங்களாக டிகிரியைக் கையில் வைத்துக் கொண்டு நாயாய்



அலைந்து பிறகு பிரிட்டிஷ் கௌன்சில் லைப்ரரியில் தனது ஏமாற்றங்களையெல்லாம் புதைத்து விட்டு வீட்டுக்கு வந்து மனச் சோர்வில் மௌனமாகிக் குளித்து சாப்பிட்டு படுத்து உறங்கும் அவனைப் பார்த்துப் பார்த்து அம்மாவுக்கு அவன் மேல் அவன் திறமை மேல் நம்பிக்கை போய் விட்டிருக்க வேண்டும் என்று அவன் நினைத்துக் கொண்டான்.

'அதிர்ஷ்டம் என்கிறது ஜாதகத்துல இல்லாத போது காரியம் எங்கே பழமாறது'' என்பாள் தன்னையே அடிக்கடி சமாதானப்படுத்திக் கொள்கிற மாதிரி.

அம்மாவின் பிரத்யேக லாஜிக் இது என்று அவன் சிரித்தாலும் கொஞ்ச நாட்களாக ஒரே கேள்வி மனத்தைக் குடைய ஆரம்பித்திருந்தது.

அதிர்ஷ்டம்.

அப்படி என்று ஒன்று இருக்கிறதா நிஜமாகவே?

இருப்பவன் இல்லாதவன் என்கிற மாதிரி இதிலும் வகுப்பு பேதமுண்டா? அம்மாவின் பேச்சைப் பார்த்தால் இந்தப் பேதமெல்லாம் மனுஷ்யத்தனத்துக்கு மீறிய விஷயம் என்கிற பிரமையை ஏற்படுத்திற்று.



பின் நான் எதற்காக எதற்கும் முயற்சி செய்ய வேண்டும்? ஃபர்ஸ்ட்கிளாஸ் வாங்கினால் வேலை வாய்ப்புக்கு நல்லது என்கிற எதிர்பார்ப்பில் ஏன் படிக்க வேண்டும்? எனக்கு அதிர்ஷ்டம் இருந்தால் தான் கிடைக்கும் என்றால் என்னுடைய ஜாதகம் என்னைத் தள்ளுகிற இடத்துக்குத் தான் நான் போவேன் என்றால்... ஏன் இத்தனை...

ஓ. புல்ஷிட்!

இந்த மாதிரி வேதாந்தம்தான் நம்மைப் பாழ் பண்ணுகிறது. எந்த அநியாயம் நடந்தாலும் அதற்கு ஒரு கவசம் போடுகிறது.

ப்ரமோத்குப்தாவின் ஞாபகம் வந்தது. ப்ரமோத் பெரிய பிஸினஸ் மேனின் பையன். காலேஜில் படித்த ஒருநாள் கூடச் சரியாகப் பாடத்துக்கு வந்ததில்லை. அவனுடைய ஸ்கூட்டரின் பிலியன் என்றைக்கும் காலியாக இருந்ததில்லை. ஒரு பெண் எப்பவும் இருப்பாள், இவனுடைய இடையைச் சுற்ற. அவன் பாஸ் செய்தது உலக மகா அதிசயம். அதுவும் ஒரு 'கோல்மால்' என்று எல்லோரும் பேசினார்கள்.




அந்த உதவாக்கரை ராஸ்கல் போன மாதம் இவன் போயிருந்த ஒரு இண்டர்வ்யூவுக்கு வந்திருந்தான். ஸஃபாரி ஸூட்டில் ஆலிங்கத்தை மென்றபடி மெதப்பாகச்சிரித்தான். பாலுவைப் பார்த்து லேசான ஆச்சரியத்தைக் காண்பித்தான்.

''ஹலோ பாலசந்தர்! இன்னுமா உனக்கு வேலை கிடைக்கலே!'' என்றான்.

எதிலோ தோற்றுப் போன மாதிரி, அவன் முன் சின்னதாகிப் போன மாதிரி ஒரு நமைச்சல் ஏற்பட்டது.

''வேலை கிடைக்கிறது அவ்வளவு சுலபமா இல்லே ப்ரமோத்!''

''இட் ஈஸ் எ டர்ட்டி வோர்ல்ட் யார்! உனக்கெல்லாம் கிடைக்கல்லேன்னு இட் ஈஸ் டூ பேட்...!''

பார்வையின் விளிம்பில் ஒரு கேலி தெரிந்தது.

''இந்த இண்டர்வ்யூவுக்கும் ரொம்ப அலட்டிக்காதே யார்!''

இவன் நம்மைப் பரிகாசம் பண்ணுகிறான் என்று சுரீரென்று கோபம் எழுந்தது.

''ஏன்?''

''என்ன, இது ஒரு வெறும் கண் துடைப்பு. ஏற்கெனவே ஒருத்தனை செலக்ட் பண்ணியாச்சு!''

''என்னது?''

''ரிலாக்ஸ் யார்! மினிஸ்டரோட சிபாரிசு!''

காலையில் வீட்டை விட்டுக் கிளம்பிய போது மேலே விரிந்திருந்த கோட்டைகள் எல்லாம் சரசரவென்று கீழே இறங்கின.

''பின்னே நீ எதுக்கு வந்திருக்கே?''

ப்ரமோத் சிரித்தான்.

''சும்மா ஒரு வேடிக்கைக்காக. இந்த வேலையெல்லாம் வேணும்ங்கற அவசியமே இல்லே யுனக்கு. அப்பாவுடைய பிஸினஸ் இருக்கவே இருக்கு...''

அடுத்த இரண்டு நாட்களில் அவர்கள் 'ஏற்கெனவே செலக்ட்' செய்த ஆள் ப்ரமோத் குப்தாதான் என்று தெரிந்த போது ஏற்பட்ட ஆத்திரமும் கோபமும் இன்னமும் பசுமையாக இருக்கிறது.

அம்மா இதையும் துரதிர்ஷ்டம் என்பாளா?

''வெங்கடாசலபதிக்கு வேண்டிக்கிறேன். நல்லபடியா நடக்கும்!''

வேண்டிக் கொண்டால் தான் அந்த வெங்கடாசலபதி நல்லது செய்வாரா? இங்கேயும் ஃபேவரிடிஸமா? அப்புறம் அந்த மினிஸ்டருக்கும் இந்தக் கடவுளுக்கும் என்ன வித்தியாசம்...? தங்கள் உருவத்திலேயே கடவுளையும் சிருஷ்டித்து... தங்கள் குணங்களையே அவனுக்கும் கொடுத்து....

அவன் சரேலென்று சுயநினைவிற்கு வந்தான். கன்னங்கள் சூடேறி உள்ளங்கை வியர்த்திருந்தது.

மைகாட், என்ன ஆகிவிட்டது நமக்கு? எதற்காக நமக்கு எந்தக் காரணத்துக்காகவாவது கோபம் வந்து கொண்டேயிருக்கிறது? கோபத்தைத் தவிர வேறு எந்த உணர்வும் தெரியாமல் போய் விடப் போகிறது கொஞ்ச நாளில்....

அதாவது இந்தத் தேர்வும் ஒரு கண் துடைப்பாக இருக்கப் போகும் பட்சத்தில்—

அவனுடைய பார்வை மறுபடி அந்தக் கடிதத்தின் மேல் சென்றது.

''எந்த சிபாரிசுக் கடிதமும் கொண்டு வரக் கூடாது...!''

இதில் எந்த ஏமாற்றமும் இல்லை என்றால் நமக்கு சான்ஸ் இருக்கலாம். அம்மாவைக் கொஞ்சம் எக்ஸ்ட்ராவாக வேண்டிக் கொள்ளச் சொல்ல வேண்டும் என்று நினைக்கையில் அவனுக்குச் சிரிப்பு வந்தது.

''என்ன நீயே சிரிச்சுக்கறே?''

அவன் சுயநினைவுக்கு வந்தான்.

மாலு நின்றிருந்தாள். கையில் ஒரு சின்னத் தட்டும் ஸ்பூனுமாய்....

''என்ன அது கையிலே?''

அவன் உற்சாகமாகச் சிரித்தான்.

''ரவா கேசரி. அவாள்ளாம் வந்ததிலே நமக்கு லாபம்! நமக்காக அம்மா நல்ல நெய்யும் முந்திரிப் பருப்பும் போட்டுக்கேசரி பண்ணியிருக்கமாட்டா.''

அவனுக்குச் சிரிப்பு கொப்புளித்துக் கொண்டு வந்தது.

குழந்தை மாதிரி சிரிக்கும் இவனுள் எத்தனை தீர்மானமான எண்ணங்கள் இருக்கின்றன என்கிற ஞாபகம் அவளுக்கு மறுபடி ஆச்சரியத்தை அளித்தது. அவனுடைய சிரிப்பு அவளையும் தொத்திக் கொண்டது.

''அம்மாவுடைய கோபம் என்ன ஆச்சு?''

அவள் மறுபடி சிரித்தாள்.

''அடங்கிப் போச்சு!''

பல் வரிசையாக வெளுப்பாக இருந்தது. ஜீன்ஸூம் டீ ஷர்ட்டும் அளவான உடம்புக்கு கச்சிதமாக இருந்தது. இந்த அழகும் அறிவும் நல்ல வேளையாக அந்த மடையனுக்கு அர்ப்பணமாகி விடவில்லை!

''நீ நல்ல சாட்டையடி கொடுத்தே மாலு இன்னிக்கு. நீ சொல்லல்லேன்னா நானே சொல்லியிருப்பேன்!''

மாலுவின் முகத்தில் மறுபடி ஒரு குழந்தைத்தனமான சிரிப்பு வெடித்தது. சம்பவத்தின் ஞாபகத்தில்.

''உங்க பிள்ளையைப் பண்ணிக்க எனக்கு இஷ்டமில்லேன்னு சொன்னவுடனே அவன் மூஞ்சி எப்படிப் போச்சு பாத்தியோ? ஹி குட்ன்ட் பிலிவ் ஹிஸ் இயர்ஸ், நம்மை ஒருத்தி வேண்டாங்கறாளேன்ற ஆச்சரியம். நீ என்னதான் சொல்லு. உங்களுக்கெல்லாம் இந்த ராங்கித்தனம் ஜாஸ்தி!''

''என்ன ராங்கித்தனம்?''

''ஆம்பிளேங்கற ஈகோ!''

''ஓ, கமான் எல்லாரையும் பொதுப் படையாப் பேசாதே!''

அது அவள் காதில் விழுந்த மாதிரித் தெரியவில்லை. முகத்தில் அந்த குழந்தைத் தனம் போய் ஒரு கடுமை தெரிந்தது. கண்களில் ஒரு தீவிரம் புகுந்திருந்தது.

''இட் இஸ் தி ஸிஸ்டம்! ஐ ஹேட் தி ஸிஸ்டம்!''

அவன் மனசு ஒருமுறை குலுங்கிற்று. இவளுக்கும் தனக்கும் எப்படி ஒரே மாதிரி ஆத்திரம் ஏற்படுகிறது என்று வியப்பேற்பட்டது. இந்த ஆத்திரம் பொதுவானதாகத்தான் இருக்க வேண்டும். இந்த யுகத்தின் ஆத்திரம்.... புதிய தர்மங்கள் ஜனிப்பதற்கு முன் ஏற்படும் பிரசவ வேதனைகள்....

அவள் சட்டென்று நிமிர்ந்து, தன்னைச் சமாளித்துக் கொண்டு அவனைப்பார்த்துப் புன்னகைத்தாள்.

''நாம வித்தியாசமா இருப்போம் பாலு! ஓ.கே?''

அவள் சத்தியம் வாங்குகிற மாதிரி கையை நீட்டினாள். சிவந்த உள்ளங்கை பட்டு மாதிரி பளபளத்தது. இத்தனை மென்மைக்குள் எத்தனை தீவிரம் என்று நினைத்தபடி அவன் ''ஓ.கே!'' என்று புன்னகைத்தான்.

அவளை உற்சாகப்படுத்தும் எண்ணத்தில்,

''எனக்கு இண்டர்வ்யூவுக்கு கார்டு வந்திருக்கு மாலு!'' என்றான்.

அவள் சந்தோஷத்துடன் கண்களை அகல விரித்தாள்.

''குட்! எப்போ?''

''நாளன்னிக்கு! ஆனா வேலைக் கிடைச்சுடும்னு என்ன நிச்சயம்?''

''நீ ஒரு போர். கிடைக்காம போனாத் தான் என்ன? உலகம் அஸ்தமிச்சுப்போயிடுமா? எப்பவுமே கிடைக்காம எப்படிப் போகும்? இந்தத் தடவைக் கிடைக்கும் பார்! இண்டர்வ்யூ போர்டுலே எவனாவது முட்டாள் இல்லாமே இருக்க மாட்டான். உன்னை ஸெலக்ட் பண்ண!''

அவன் புன்னகைத்தான்.

''எனக்கு வேலை கிடைக்கணுங்கறது ரொம்ப அவசியமான விஷயம் மாலு!




உன் கல்யாணப் பொறுப்பை நா ஏத்துக்கறேன்னு அப்பாகிட்டே சவால் விட்டிருக்கேன்!''

அவள் நம்ப முடியாதவள் போல் அவனைப் பார்த்துப் பிறகு அடக்க முடியாதவளாய் சிரித்தாள்.

''சிவாஜிகணேசன் மாதிரியா?''

அவனுக்கு அந்தச் சிரிப்பு வெகு நேரத்துக்கு மனசில் நின்றது.

இண்டர்வ்யூவுக்குக் கிளம்பும் நேரத்திலும் எதிர்பாராமல் ஞாபகம் வந்தது. வெங்கடாசலபதியின் படத்திற்கு சூடம் ஏற்றி அம்மா அவனை ''தைரியமா போயிட்டுவா'' என்று ஆசீர்வதித்தாள்.

அவன் இறங்கித் தெருவுக்கு வரும்போது தனக்குள் நினைத்துக் கொண்டு புன்னகைத்தான். மாலு சொன்ன மாதிரி இண்டர்வ்யூ போர்டில் எவனாவது ஒரு முட்டாள் இருக்க மாட்டானா நம்மை ஸெலக்ட் செய்ய?

(தொடரும்)







தலைவலி,
உடல்வலி,
ஜலதோஷம்
மறைந்திடும்
இங்கே







90 ஆண்டுகளாக நம்பகமானது.

அமிர்தாஞ்சன்

துரித நிவாரணம் உறுதியுடன் அளிப்பது.
தீய பின்விளைவுகள் இல்லாதது.



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஒவ்வொரு மனிதனும் தினந்தோறும் ஒவ்வொரு அனுஷ்டானத்தைக் கைக்கொள்ளவேண்டும் என்று விரும்புகிறது.

ஒவ்வொரு மனிதனும் காலையில் எழுந்திருந்து பல் துலக்கி, கிழக்கு முகமாக உட்கார்ந்து கொண்டு கையில் ஜலத்தை சிறிது எடுத்துக் கொண்டு கங்கையை மனதில் நிறுத்திக் கொண்டு அந்த ஜலத்தைத் தன் உடம்பின் மேல் ப்ரோக்ஷித்துக் கொள்ள வேண்டும். பிறகு 108 தடவை ஸ்ரீராமா என்னும்

## குழந்தைகளை வளர்க்க!

✲ சிறு குழந்தைகளின் பால் பாட்டில்களைச் சுத்தமாகக் கழுவும் முறை நமக்குத் தெரியும். ரப்பர் நிப்பிளையும் அதே அளவு கவனத்துடன் சுத்தப்படுத்த வேண்டும். நிப்பிளை உள்பக்கமாகத் திருப்பி, முதலில் உப்புப் பொடியாலே சுத்தப்படுத்தி பிறகு கொதிக்கும் நீரால் சுத்தப் படுத்துவதே சிறந்த முறை.

✲ பாட்டிலில் பால் தரும் போது ஒரு போதும் தலையணையில் சாய்த்து வைத்தோ, மெத்தையில் ஒருக்களித்து வைத்து விட்டோ அகன்று விடாதீர்கள். குழந்தைகளுக்குப் புரையேறி ஆபத்து ஏற்படுவது ஒருபுறம் இருக்கட்டும். பால் குடிக்கும் போதுதான் தாயின் அண்மையில் பாதுகாப்பையும், வாழ்க்கையில் நம்பிக்கையையும் குழந்தை பெறுகிறது. பாலூட்டும் நேரமே குழந்தைக்கும், தாய்க்கும் பாசப் பிணைப்பு இறுகும் நேரம். எனவே தாய்ப்பால் தருவது போலவே மடியில் வைத்து அரவணைத்துக் கொடுங்கள்.

✲ பால் குடித்த பிறகு எப்பொழுதும் படுக்கையில் நேராகப் படுக்க வையுங்கள். மடியிலேயே வைத்துக் கொண்டிருப்பதும் தவறு. அப்புறம்

## மூக்குக் கண்ணாடி போடுபவரா நீங்கள்?

நாம் கண்ணாடியைப் போடும் போதும், எடுக்கும் போதும் இரண்டு கைகளையும் கண்டிப்பாக உபயோகப்படுத்த வேண்டும். ஒரே கையினால் அழுத்தத்தைப் பிரயோகித்து, கண்ணாடியைப் போடுவதாலோ, கழற்றுவதாலோ, அது தன் நிலையிலிருந்து மாறுபட ஏதுவாகிறது.

கண்ணாடியைக் கழற்றி வைக்கும்போது, அதன் கண்ணாடி (லென்ஸ்) பகுதி தரையைத் தொடாதவாறு வைக்கவேண்டும். கீறல் விழுந்த லென்ஸ்களையோ, கண்ணாடியையோ தொடர்ந்து உபயோகிப்பதால் கண் கோளாறு அதிகரிக்கும் வாய்ப்பு உண்டு.

கண்ணாடியின் ஓரங்களில் அகத்தம் சேர அதிக வாய்ப்பு உண்டு. அதைச் சுத்தம் செய்ய பழைய பல் துலக்கும் பிரஷ் போதும். குழாய்த் தண்ணீரையும் சோப்

## அன்பர்களுக்கு...

நாமத்தை ஜபிக்க வேண்டும். பிறகு சூரியனைப் பார்த்து நமஸ்கரிக்க வேண்டும். இதுபோல் மாலையில் விளக்கு வைக்கும் நேரத்திலும், கால்களை அலம்பிக் கொண்டு, மேற்கு முகமாக உட்கார்ந்து கொண்டு கொஞ்சம் ஜலத்தை கையில் எடுத்துக் கொண்டு அந்த ஜலத்தைத் தன் உடம்பில் ப்ரோக்ஷித்துக்கொண்டு சிவநாமத்தையோ அல்லது ராம நாமத்தையோ 108 முறை ஜபிக்க வேண்டும். இப்படி இந்த அனுஷ்டானத்தைத் தொடங்குவதற்கு சமீபத்தில் உள்ளகோவிலுக்குச் சென்று சுவாமியின் முன் முதல் நாள் தொடங்க வேண்டும். பிறகு அந்த அனுஷ்டானத்தை ஒவ்வொருவரும் தன் வாழ்நாள் முழுவதும் செய்ய வேண்டும். இப்படிச் செய்ய ஆரம்பித்தவர்கள் ஆரம்பித்து நடத்தும் காரியத்தைக் கீழ்க் கண்ட விலாசத்திற்குத் தங்கள் முழு விலாசத்துடன் தெரிவித்தால் அவர்கள் பெயரில் ஸ்ரீமடத்தில் செய்யப்படும் பூஜையில் ஒரு புஷ்பம் போட்டு பிரசாதம் அனுப்பி வைக்கப்படும் என்பது ஸ்ரீகாஞ்சி காமகோடி பீட சங்கராச்சாரிய சுவாமிகளின் அபிப்பிராயம்.

மானேஜர்,
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்
காஞ்சிபுரம்.



எப்பொழுதும் மடியிலேயே இருக்க வேண்டும் என்று உரிமை கொண்டாட ஆரம்பித்து விடும். சுதந்திரமாக விளையாட விடுவது தன்னம்பிக்கையை வளர்க்கும்.

❊ குழந்தைகளை ஆரம்பத்திலிருந்தே உணவுக்காகக் கட்டாயப்படுத்தக் கூடாது. விரும்பும் உணவை விரும்பிய அளவில் மட்டுமே தர வேண்டும். எந்த வொரு உணவிற்காகவும் கட்டாயப் படுத்தினால் பின்னர் சாப்பிடும்நேரமே களேபரநேரமாகக் காட்சியளிக்கும். சாதம் கலந்து கொண்டு சாப்பிட வைப்பதற்குள் போதும் போதுமென் றாகி விடும்.

❊ குழந்தைகளைக் குளிப்பாட்டிய பிறகு 'சொரசொர'வென்று துணியால் 'துடைப்பது' தவறு. மிருதுவான துணியால் 'ஒத்தி ஒத்தி' எடுக்க வேண்டும்.

நன்றி: ஜான்சன் & ஜான்சன் வெளியிட்டுள்ள 'அவர் பேபி'ஸ் குரோயிங் அப் புக்' புத்தகத்திலிருந்து.

யையும் உபயோகிக்கவும். சோப் தண்ணீரால் கழுவுவதால்'ப்ரேம்'ற்கோ, கண்ணாடிக்கோ தீங்கு விளையாது. உண்மையில், தினமும் கண்ணாடியைத் தண்ணீரில் கழுவுவதால், கண்ணாடி நல்ல நிலைமையில் பாதுகாப்பாக இருக்கிறது. ஆனால் கழுவியபின், சுத்தமான உலர்ந்த துணியால் துடைத்துவிட வேண்டும்.

எப்போதும் 'லென்ஸ் கிளீனிங் பேப்பர்' எனப்படும் திசுப் பேப்பர்களை உபயோகிக்கக் கூடாது. தொடர்ந்து இந்தத் திசுப்பேப்பர்களை உபயோகிப்பதால் கண்ணாடி கெட்டுவிட வாய்ப்பு உண்டு. அதேபோல், சிலிகோன் போன்ற ரசாயன பொருட்களால் சுத்தம் செய்வதால், கண்கள் கெடவேவாய்ப்பு உண்டு.

சோப் தண்ணீரே சிறந்தது, பாதுகாப்பானது.

—லட்சுமி நடராஜன்



# அரைஞாண் கயிற்றில் அழகிய நெக்லேஸ்!

மெக்ரோம் என்பது நூலின் உதவியால் பலவிதப் பொருட்களைச் செய்யும் ஓர் அழகான கலை. இது 13-ம் நூற்றாண்டிலேயே இருந்தகலை.



நடுவில் ஏறக்குறைய மறைந்தே போன இக்கலை பல அயல்நாடுகளில் பலவிதக் கலைப் பொருளாக விளங்கி தற்சமயம் நம் நாட்டிலும் இக்கலை விரிவாக பல இடங்களில் பல பொருள்களாகக் காணப்படுகிறது.

இதற்குச் சிறிது கற்பனைத் திறனுடன் பொறுமையும் இருந்தால் போதும். கவர்களை அலங்கரிக்கும் கர்ட்டன்கள் பைகள், விளக்கு ஷேடுகள், தோரணங்கள் ஏன் உடுப்புக்கள் அதன்மேல் போர்த்திக் கொள்ளும் ஷால் முதலியவைகளைச் செய்யலாம். இவை மட்டுமே அல்லாமல் தற்காலத்தில் தங்க நகை போன்ற நெக்லஸ் கை, காது, கழுத்து ஆகியவற்றிற்கு ஆபரணங்களும் கூடச் செய்யலாம்.



1) Flat Knot தட்டைமுடி.



2) Simple Knot சுலபமுடி.



3) Over hand Knot நூல் மேலாக எடுத்துப் போடும் முடிச்சு.

**நெக்லேஸ்:**

இதைச் செய்யத் தேவையான பொருட்கள்:—

1) இடுப்பில் கட்டும் அரைஞாண் ஸில்க் கயிறு பல நிறங்களில் கிடைக்கின்றன. விலையும் 20 மீட்டர் ரூ. 10 தான். அதிகக் கனமில்லாதது.

2) கல்மணி (அ) பிளாஸ்டிக் மணி, அல்லது கண்ணாடி மணி — 78 மணிகள். சுமார் பட்டாணி கனமுள்ள ஒரேசமமான மணிகள். மெக்ரோம் Silk yarn. 2 அடி நீளமுள்ள ஒரு துண்டு 12'' நீளமுள்ள 78 துண்டுகள்.

கத்தரிக்கோல், வேலை செய்ய ஓர் பலகைத் துண்டு. நூலை போர்டில் பொருத்த இரு ஜதை பின்கள். ஓரங்களைப் பிரியாமல் வைக்க பசை. இந்தக் கலையில் முக்கியமாக அறிய வேண்டியது மூன்று விதமான முடிச்சுகள்.

1) தட்டையான முடிச்சு (Flat Knot)

2) (Simple Knot) எளிமையான முடிச்சு.

3) முடிவில் போடும் (Over hand Knot).

**நெக்லேஸின் விளக்கம்:**

முதலில் 2 அடி நீளமுள்ள மெக்ரோம் நூலை இரு பின்னின் உதவி



ஒத்தடம் கொடுக்கப் பயன் படும் வெந்நீர்ப் பையை முதல் முறையாக உபயோகிக்குமுன், கொஞ்சம் கிளிசரினை ஊற்றி, பின் வெந்நீரை ஊற்றினால் அது பையின் ரப்பரை பாதுகாத்து நீண்ட உழைப்பைத் தரச் செய் யும்.

—கே. பி. பரமேஸ்வரி



யால் கழுத்தில் அமையும் அமைப்பின் அளவுப்படி போர்டிற்கு பின் செய்து வந்த நூலை அடிப்படையாகக்கொண்டு 12'' நீளமுள்ள 39 ஜதை நூலை, ஜோடி ஜோடியாக, பக்க பக்கத்தில் கோர்த்து வைக்கவும்.

பிறகு நான்கு இழையை ஒரு groupபாக எடுத்து மத்தியில் உள்ள இரு நூலின் மேல் இடதும் வலதும் பக்கத்திலுள்ள நூல்களின் உதவியால் முடிச்சைப் போடவும். வலதுபக்கமுள்ள நூலை மத்தியிலுள்ள இரு நூல்களின் மேலாக எடுத்து இடதுபக்கமாகக் கொண்டுபோய், இடது பக்கமுள்ள நூலை அங்கு வந்துள்ள வலது பக்க நூலின் மேல் அடிப்பக்கமாக எடுத்து அதை மத்தியிலுள்ள இரு நூல்களின் அடிப்பாகத்திலிருந்து எடுத்து வலது புறத்து நூலை எடுக்கும் போது அந்த இடத்தில் ஏற்படுத்தியிருந்த வளையின் மூலமாக எடுத்து இரு பக்க நூலையும், மத்திய நூலின் ஆதாரத்தில் வைத்து ஒரேசமமாக இழுக்கவும். மறுபடியும் இதேபோல் இடதுபக்கத்தின் நூலை வலது பக்கமாகக் கொண்டுவந்து, வலது பக்க நூலை இடது பக்க நூலின் மேல் போட்டு நடு இரு நூலின் அடிப் பாகத்திலிருந்து எடுத்து இடது பக்க லூப்பில் நுழைத்து இப்பொழுது இடது, வலது நூல்களை சமமாக ஒரே டென்ஷனுடன் இழுக்கவும். இப்பொழுது ஓர் தட்டை முடிச்சு ஏற்படும். இதேபோல் ஒவ்வொரு இரு ஜதை நூல்களில் 39 தட்டை முடிச்சுக்களைப் போட்டுஒரு வரிசை horizontal cording line போடவும்.

அடுத்த வரியில் நடு இரு நூலில் மணியைக் கோர்த்து பக்கத்திற்கொன்றாக இருக்கும் இடது வலது நூல்களை மணியின் பக்கமாகக் கொண்டு வந்து, துளைக்கு அடியில் நடு இரு நூலின்மேல், வலதுபக்க நூலை மேல் போட்டு இடது பக்க நூலை வலது பக்க நூலின் லூப்பின் மூலமாக எடுத்து அந்த நூலை நடு இரு நூலின் அடியிலிருந்து எடுத்து, ஆரம்பத்தில் வலதுபக்க நூலில் வைத்துள்ள வளைந்த லூபின் மூலமாக வெளியில் எடுத்து ஒரே அளவு டென்ஷனில் இருபக்கமாக இழுக்கவும்.

இதேபோல் ஓர் வரி மணியின் மேல் போட்டு, அடுத்த வரி தட்டை முடிச்சு போட்டு மறுபடியும் மணிகளை Alternate டாக நடு இரு நூலில் கோர்த்து முதலில் செய்தது போலவே மற்றுமொரு horizontal line போட்டு. பிறகு ஒரு வரி தட்டை முடிச்சு போட்டு கடைசியாக over hand knot போட்டு ஓரம் பிரிந்து விடாமலிருக்க பசையைத் தடவி, ஆறிய பிறகு கத்தரிகோலின் உதவியால் சத்தரித்தால் பிசிறு இல் லாமல் அழகாக இருக்கும்.

இவ்விதம் ஓர் நெக்லஸ் செய்ய பதினைந்து ரூபாயிலிருந்து இருபது ரூபாய் வரை மட்டுமே செலவாகும்.

—ரத்னா நரசிம்மையா

# பெண்களின் சில நிரந்தரப் பிரச்சனைகள்

டாக்டர் கமலம்மா M.D. D.G.O.



பிரசவமான பிறகு ஆறு முதல் எட்டு வாரம் வரையிலான நாட்களே மிக முக்கியமானவை. இந்த நாட்களில் தாயும், சேயும் மிகவும் கவனமாக இருக்கவேண்டும். பிரசவம் என்பது ஒரு ஆபரேஷன் நடந்து முடிந்தது போலத்தான். எனவே கவனமும், சுத்தமும் மிகவும் அவசியம்.

நம்முடைய பழைய நாட்களில் முதல் பதினொரு நாட்கள் வரை தாய்சேய் இருவரையும் தீட்டு' என்ற பெயரில் தனியாக அவர்களை வைத்து விடுவார்கள். அந்த நாட்களில் குழந்தையை யாரும் அணுகவோ தொடவோ முடியாது.

இது மிகவும் நல்லது. ஏனெனில் அந்தச் சின்னஞ்சிறு சிசுவுக்கு மிக எளிதில் நோய்கள் தொற்றிக் கொள்ள வாய்ப்புண்டு. அதுவும் இப்பொழுது நவீன காலத்தில் வெளியுலகில் செல்லும் மனிதர்களுக்கு ஆயிரம் வகையான கிருமிகள் வந்து பிடித்துக் கொள்ளும். அதே அசுத்தங்களோடு வீட்டிற்குள் நுழைந்து குழந்தையைத் தொடும் போது பலதரப்பட்ட நோய்கள் சிசுவைப் பிடிக்கின்றன.

எனவே முதல் இரண்டு வாரங்கள் குழந்தையையும் பிரசவித்த தாயையும் நல்ல ஓய்வில் தனிமையில் விடுவது நல்லது. இது பலவிதங்களிலும் அவர்களுக்கு நன்மையைத் தரும். தாய்க்கும் குழந்தைக்கும் நல்லதொரு பாசப் பிணைப்பு உண்டாகிறது. தாயன்பினை முழுமையாகப் பெறும் குழந்தையே எதிர்காலத்தில் நல்ல பிரஜையாக வளர முடியும். அதே போல தாய்க்கும் ஓய்வும் தனிமையும் கிடைப்பதால் மனம் நிம்மதியடைகிறது. இந்த நாட்களில் உடலும் அதனால் உள்ளமும், தளர்வடைந்து இருக்கும். அவர்களால் எந்தவொரு அதிர்ச்சியையும் தாங்க முடியாத நிலையில் இருப்பார்கள். எனவே தாயைத் தன் குழந்தையுடன் தனிமையில் நிம்மதியாக விடுவதால் உடல்நிலை தேற ஏதுவாகிறது.

'பெட் ரெஸ்ட்' எனப்படும் முழுமையான ஓய்வு தாய்க்கு இருபத்திநான்கு மணிநேரம் கிடைத்தால் போதும். அதற்குப் பிறகு எழுந்து நடமாடலாம். குழந்தையின் வேலைகளையும், தன்னுடைய வேலைகளையும் பார்த்துக் கொள்ளலாம். ஆனால் அதிகமான வேலைகள் கூடாது. உடற்பயிற்சி செய்ய விரும்பும் தாய்மார்கள் ஆறு வாரம் வரை பொறுத்திருந்து எளிமையான உடற்பயிற்சிகளைச் செய்யலாம். அதிகமாக உடம்பினை வருத்திக் கொள்வதால் அபாயங்கள் உண்டாகலாம்.

கர்ப்ப காலத்தில் விரிந்த வயிறு சுருங்க வேண்டும் என்பதற்காகத் துணி அல்லது பெல்ட் கொண்டு வயிற்றை இறுக்கமாகக் கட்டிக் கொள்வார்கள். இது மிகவும் தவறானது. இதனால் சிறுநீரகம், கர்ப்பப்பை முதலியவற்றிற்குக் கேடுகள் உண்டாகலாம். கர்ப்பப்பையே கீழிறங்கி விடுவதற்கான வாய்ப்புகள் கூட உண்டு.

முதல் ஆறு வாரம் வரை இதுபோன்ற கடுமையான செயல்களைச் செய்யவே கூடாது. ஆறு வாரத்திற்குப் பின்னர் குனிந்து நிமிர்ந்து சாதாரண வேலைகளைச் செய்வதன் மூலம் தசைகள் இறுகப்பெற்று வயிறு சுருங்கி விடும். மருத்துவர் சொல்லித் தரும் உடற்பயிற்சிகளும் இதற்கு உதவும். தாய்ப்பால் தரும் தாய்மார்களுக்கும் இயற்கையாகவே வயிறு சுருங்கி விடும்.

பிரசவித்த பின்னர், நம்மிடையே இருக்கும் ஏராளமான தவறான நம்பிக்கைகளில் ஒன்று முதல் மூன்று நாள் தாய்ப்பால் தரக் கூடாது என்பது. இதனால் இருவித பெருந் தீமைகள் ஏற்படும். தாய்மார்களுக்கு முதல் மூன்று நாட்களில் சுரக்கும் தாய்ப்பாலில்தான் குழந்தைக்கு நோயை எதிர்க்கும் சக்தியைத் தரும் அத்தனை சத்துக்களும் உள்ளன. இவை காலம் முழுவதும் அவனுக்குப் பலன் தரக் கூடியது என்று இன்றைய ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். அத்தகைய சத்து மிகுந்த பாலை இழக்கவும் நேருகிறது. அதே போல உடனடியாகப் பால் கொடுக்க ஆரம்பித்தால் தான் பாலும் சுரக்க ஆரம்பிக்கும். மூன்று நாட்கள் தாமதம் செய்யும் போது பாலின் சுரப்பின் அளவு குறைவதுடன் பால் கட்டிக் கொண்டு தாய்க்குக் காய்ச்சல் வரும் வாய்ப்பும் அதிகமாகும்.

அடுத்தது தாய்க்குத் தரும் பத்திய உணவுகள், எண்ணெய்க் குளியல்கள் இவற்றைப் பற்றியும் சொல்லியாக வேண்டும்.

வயிற்றிலுள்ள புண் ஆற வேண்டும் என்று ஏராளமாக நெய்யை ஊற்றி நிறைய சாப்பிட வைத்து உடனே தண்ணீரும் கொடுத்து விடுவார்கள். அதற்குப் பிறகு எவ்வளவு தாகம் எடுத்தாலும் தண்ணீர் கொடுக்க மாட்டார்கள். தூங்கவும் கூடாது என்று உட்கார்த்தி வைத்து விடுவார்கள். இவற்றில் எல்லாம் எந்தப் பயனும் இடையாது.

புண்ணிற்கும், நெய்க்கும் ஒரு சம்பந்தமும் இடையாது. நல்ல ஓய்வுடன் நெய்யும் சேரும் போது ஜீரண உறுப்புக்கள் மந்தமடைகின்றன. சத்தான நல்ல கறிகாய்களுடன் தேவையான அளவு சாப்பாடு போட்டாலே போதும். தண்ணீர் நிறையக் குடிப்பது நல்லது. அதேபோல மோர் தயிர் இவற்றையும் தரலாம். பகலில் தூங்கக் கூடாது என்பதும் தவறே. பிரசவித்த தாய்மார்களுக்கு நல்ல ஓய்வு தேவை. இரவில் குழந்தையும் அடிக்கடி விழித்துக் கொண்டு பாலுக்கு அழும். எனவே இரவிலும் தூக்கமில்லாமல், பகலிலும் தூக்கமில்லாமல் தாய் தவிக்க வேண்டியதாகிறது. நல்ல ஓய்வு, நல்ல தூக்கம், சத்தான சாப்பாடு இவையே முக்கியம். மற்றபடி பரம்பரையான பழக்கம் என்று கூறி அவர்களை வருத்துவது நல்லதல்ல.

அதேபோன்றும் மற்றொரு பழக்கம் எண்ணெய்க் குளியல். இதை ஒரு பெரிய சடங்காகவே செய்கிறார்கள். தாய்க்கும், குழந்தைக்கும் உடம்பு முழுக்க எண்ணெயை ஊற்றி, கொதிக்கக் கொதிக்க நீரை விட்டு உண்டு இல்லை என்று செய்து விடுகிறார்கள். இதனால் இருவருமே மிகவும் களைத்துப் போய் உறங்கி விடுவார்கள். ஓய்வாக ஆரோக்கியமாக உறங்குவது நல்லது. களைத்துப் போய் உறங்குவது என்பது வேறு.

குழந்தைக்குக் கண், மூக்கு, காதுகளில் எண்ணெய் விட்டு மிக மென்மையான சரீரத்தில் கடகட நீரைக் கொட்டுவது மிகவும் தவறு. சருமம் புண்ணாவதுடன் கபம் கட்டிக் கொள்ளுதல் போன்றவை ஏற்பட்டு பிற்பாடு நிரந்தர நோய்களுக்கு அடிகோலுகிறது.

குழந்தையைக் குளிப்பாட்டுவதற்கென்றே ஒருவரை நியமித்தாலும், அவருடைய அசுத்தங்கள் எல்லாம் குழந்தைக்கும் தொற்றிக் கொள்வதும் ஆபத்தில் முடியும். கபத்தை எடுக்கிறேன் என்று வாயோடு வாய் வைத்து ஊதுவதால், ஊதுபவரின் அத்தனை நோய்களும் குழந்தைக்குத் தொற்றிக் கொள்கின்றன. குழந்தையை அதனுடைய தாயே குளிப்பாட்டுவது தான் மிகச் சிறந்தது. அவள் உடல்நிலை தேறுதல் வரை குடும்பத்தில் உள்ள ஆரோக்கியமான நபரும், பின்னர் தாயுமே குழந்தையைக் குளிப்பாட்ட வேண்டும்.

மென்மையான வெந்நீர் விளாவிய ஒரு 'டப்'பில் குழந்தையை மிருதுவாகக் குளிப்பாட்ட வேண்டும். நீண்ட நேரம் நீரில் ஊற விடாமல் உடனடியாகக் குளிப்பாட்டி மென்மையான துண்டால் நீரை ஒற்றியெடுத்து விட்டாலே போதும்.

தாய்க்கும் எண்ணெயை ஊற்றி அவளைக் களைப்படையச் செய்வது நல்லதல்ல. ஓரளவு ஆரோக்கியம் பெற்றுவிட்ட தாய் தன்னைத் தானே கவனித்துக் கொள்ளலாம்.

வேலைக்குச் செல்லும் தாயானால் குழந்தை பெற்ற பின் மூன்று மாதங்களாவது முழுமையாக வீட்டில் இருந்து குழந்தைக்குத் தாய்ப்பால் தருவது நல்லது. தாய்ப்பால் இல்லாத தாய்மார்கள் வீட்டில் வாங்கும் பாலையே உபயோகப்படுத்தலாம். பாலை நன்கு கொதிக்க வைத்து ஆற வைத்துக் கொடுத்தாலே போதும். பால் தரும் பாட்டில்களை நன்கு கொதிக்கவைத்த நீரால் கழுவிச் சுத்தப்படுத்தி வைத்துக் கொள்ள வேண்டும். அதுதான் முக்கியம்.

எருமைப்பால் கொடுத்தால் வயிற்றில் கட்டிவரும் என்பதெல்லாம் நிரூபிக்கப்படாத ஒன்று. அதில் ஓரளவு நீரைக் கலந்து கொடுக்கலாம். குழந்தையின் பசி, வளர்ச்சி இவற்றைப் பொறுத்து ஆகாரங்களை ஒவ்வொரு தாய்மாரும் தானே தீர்மானித்துக் கொள்ள வேண்டும். இவ்வளவுதான், இப்படித்தான் என்று தீர்மானமாகக் கூற முடியாது.

அதேபோல மற்ற குழந்தைகள் நிறையச் சாப்பிடுகிறார்கள், 'கொழு கொழு'வென்று இருக்கிறார்கள். நம் குழந்தைகள் அப்படியெல்லாம் இல்லையே என்று ஒப்பிட்டுக் கொள்வது தவறு. குழந்தை நோயின்றி, சுறுசுறுப்புடன் இருக்கிறதா, அந்தந்த மாதத்திற்குரிய வளர்ச்சிகளும், அசைவுகளும் இருக்கின்றனவா என்று பார்த்துக் கொண்டாலே போதும். குழந்தை பிறந்த பத்து நாட்களில் சிறிது எடை குறையும். பிறகு படிப்படியாக உடல் வளர ஆரம்பிக்கிறதா என்று கண்காணித்தாலே போதும்.

குழந்தை ஆரம்ப காலங்களில் ஒரு நாளைக்கு இரண்டு மூன்று முறை மலம் போனாலும் தவறில்லை. சரியாக மலம் போகாத குழந்தைகளுக்குத் திராட்சையைக் கொதிக்க வைத்த நீர் கொடுக்கலாம். கொதிக்க வைத்து ஆறவைத்த தண்ணீர் நிறைய கொடுப்பது நல்லது. வைட்டமின்களோ, மருந்தோ எதுவானாலும் முதல் மூன்று வாரங்களுக்குத் தேவையில்லை.

குழந்தைக்கு மூன்று மாதம் ஆன பிறகு முளை கட்டிய கேழ்வரகை அரைத்துக் கஞ்சியாக்கித் தரலாம். இது மிகுந்த சத்துள்ள ஆகாரமாகும். கேழ்வரகு உஷ்ணம்; தரக் கூடாது என்று கூறுபவர்கள், குழந்தைக்குச் சத்துள்ள உணவைத் தர மறுக்கிறார்கள் என்பது தான் பொருள்.




● அனீமியா — சிறப்புக் கட்டுரை இம்மாத மங்கையர் மலருக்கே செறுத்தப்பட்ட புத்தம் புது இரத்தமாக இருந்தது.
அபிராமவல்லி, —வியாசர் காலனி.

சந்தா விவரம்
தனிப்பிரதி ரூ. 2-00
ஆண்டுச் சந்தா ரூ. 24/-
ஆறு மாத சந்தா ரூ. 12/-

● ஜோதிடத்தில் என்னளவு... ஏன்? என் முன்னளவு கூட நம்பிக்கையில்லாத எனக்கு (மூன்றுவது) படம் சொன்ன ஜோதிடத்தைக் கண்டு வியப்பும் திகைப்பும் ஏற்பட்டது.
எம். பஷீர். ஹைதராபாத்—12.

● ஒவ்வொரு நடுத்தரக் குடும்பத்தின் நிலையையும் எடுத்துக் கூறும் இயல்பான வாழ்க்கைச் சித்திரமாகத் தொடருகிறது வாஸந்தியின் 'எல்லைகளின் விளிம்பில்'. கல்வியறிவு தந்திருக்கும் புதுமையான, துணிச்சலான எண்ணங்களினுல் வரதட்சிணைக் கொடுமையை எதிர்க்கும் மாலு, வேலையில்லாப் பட்டதாரி பாலு, வரதட்சிணை கொடுப்பதும் கேட்பதும் தவறு என்று தெரிந்திருந்தும் அதைக் கொடுத்தேனும் மகளைத் திருமணக் கோலத்தில் காணத் துடிக்கும் பெற்றேர் — அனைவருமே நாம் சமுதாயத்தில் பார்த்துக் கொண்டிருப்பவர்கள்தான். 'ராமு'வின் கோட்டுச் சித்திரங்கள் பாத்திரங்களைக் கண்முன் நிறுத்துகிறது என்று கூறினல் மிகையாகாது.
கோ. பாபு. சென்னசேலம்.

● 'தையல் பகுதி' மிகவும் பயனுள்ளது. 'மாதம் ஒன்றைக் கற்றுக் கொள்ளுங்கள்' பகுதி பொழுது போக்காகவும், பயனுள்ளதாகவும் உள்ளது.
நளினிதேவி, திண்டுக்கல்—3.

● மின்னுவதெல்லாம் பொன்னல்ல; நட்சத்திர வாழ்க்கை போலி. சீரழிந்த வாழ்க்கை என எண்ணுபவர்கள் திருமதி கலோசனு, கமலா காமேஷ் போன்ற கடமையும் பொறுப்பும் மிக்க தாய்மார்களைக் கண்டு தங்கள் கருத்துக்களை மாற்றிக்கொள்ளட்டும். மஞ்சுளாரமேஷின் இந்தச் சாதனை போற்றத்தக்கது. கொடிகட்டிப் பறக்கும் நட்சத்திரங்களின் உல்லாச வாழ்விலும் சோகமும் உள்ளது என்பதைப் புரிய வைக்கிறர்.
கங்கா, அண்ணநகர்.

● அக்னிப் பூக்கள் குறுநாவலைப் படித்தேன். நானும் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்தவள் என்பதால், காவிரி கரைப்பற்றி இந்த நாவலில் வரும் கதை உண்மைக்கதை என்றே நம்புகிறேன். இது ''அக்னிப்பூக்கள்'' அல்ல. படித்தவர் மனத்தை அழ வைக்கும் ''கண்ணீர்ப் பூக்கள்''.
சி. மகாலிங்கம், வலங்கைமான்.

● 'அக்னிப் பூக்கள்' படித்து மனதில் ஒரே சோக மூட்டம். வேறு வேலையே ஓடவில்லை. நான்காமவள் நெஞ்சை விட்டு அகல மறுக்கிறுள்.
பி. இந்திரா, ஸ்ரீரங்கம்.

● ''அக்னிப் பூக்கள்'' கதை நெஞ்சை நெகிழச் செய்தது என்னவோ உண்மை. ஆனல் இப்படியும் தாய் தந்தையர் இருப்பார்களா உண்மை வாழ்க்கையில் என்ற கேள்வியே எழுந்தது என் மனதினில்.
டாக்டர். வீரலக்ஷ்மி நந்தகோபால் ஈரோடு-3

# அறிமுகப்படுத்துகிறோம்!
# நீண்ட ஆராய்ச்சியின் விளைவாக உண்மையிலேயே செயலாற்றும் ஆயுர்வேத சரும களிம்பு!

# ஸான்டலின்-டி

மாசு மருக்களை நீக்கி, உங்கள் சருமத்தை மலரிதழ்போன்று வழவழப்புடனும் மிருதுவாகவும் ஆக்குகிறது.




இப்போது முதன்முறையாக மூலிகைகளின் ஆற்றும் சக்திவாய்ந்த, பரிசுத்தமான, இதமளிக்கும் சரும களிம்பு... ....மாசில்லாத மேனிக்கு மட்டுமல்லாமல், உண்மையிலேயே சருமத்திற்கும் புத்துயிரளித்து மென்மையாகவும், மழமழப்பாகவும் ஆக்கும் சக்தி வாய்ந்தது.

ஆயுர்வேத முறையில் உருவாக்கப்பட்ட ஸான்டலின்-டி வறண்ட சருமத்திற்கு மிகச் சிறந்த களிம்பு. மற்றும் கண்ணின் கீழே தோன்றும் கருவட்டங்கள், வெண்தேமல்கள், நெற்றியில் தோன்றும் கரும்புள்ளிகள், "அலர்ஜி"யால் விளையும் தடிப்புகள், அரிப்புகளுக்கும் ஏற்றது.

சருமத்தை பகட்டாகவும் பளபளப்பாகவும் இருக்க உதவும் ஸான்டலின்-டி, ஒரு "ஸ்கின்-கண்டிஷனர்" ஆகவும் செயலாற்றுகிறது. நீங்கள் இழந்த இயற்கையின் எண்ணைச் சத்துக்களை ஈடு செய்து உங்கள் சருமத்தை புதுப்பொலிவுடன் ஊட்டமுள்ளதாக்குகிறது. மேலும் இளமை குன்றாத செழிப்புடன், மாசுமறுவற்ற சருமத்தை அளிக்கிறது.

---

## ஸான்டலின்-டி மேன்மையான சரும பராமரிப்புக்கு மூலிகைகளின் சேர்க்கை கொண்ட ஆயுர்வேத அடிப்படையிலான ஆதாரவழி.

---

இந்த தரமான தயாரிப்பை அளிப்பவர்கள்:

## பொருகா இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்

கன்ஸ்யூமர் பிராடக்ட்ஸ் டிவிஷன், 22-A, கதீட்ரல் ரோடு, சென்னை-600 086.
தொலைபேசி எண் : 83782

இந்தியாவின் இணையற்ற மும்வகையில் செயலாற்றும் "ஆயுர்சக்தி"
– ஆயுர்வேத வலி நிவாரணி தயா

# அம்மா சந்தித்த மனுஷி

## அனுராதா ரமணன்

அருணா நினைத்த அளவுக்கு அம்மா சோர்ந்து போய் விடவில்லை. முகத்தில் மாத்திரம் வியர்வை ஆறாய் பெருகுகிறது. புடவைத் தலைப்பால் முகத்தை அழுந்தத் துடைக்கும் அம்மாவின் கை, நெற்றியில் மாத்திரம் சற்று ஜாக்கிரதையாய்.... பொட்டு வைக்கும் இடத்தை மட்டும் விட்டுவிட்டு விரல் நுனியில் புடவைத் தலைப்பைச் சுற்றி.

அப்படித் துடைத்தவள், அடுத்த கணமே மகளைப் பார்த்து பரிதாபமாய்ச் சிரிக்கிறாள்

''பழக்க தோஷம் .. ஒரு வருஷமா ரெண்டு வருஷமா... நாப்பது வருஷப் பழக்கம்... சட்டுனு விடமுடியல்லே..''

அருணா, அம்மாவின் முகத்தை ஏறிட்டுப் பார்க்க முடியாமல், பார்வையைப் பாண்டி பஜார் கடைத் தெருப் பக்கம் திருப்புகிறாள்... நெஞ்சுக்குள் பழைய நினைப்புக்கள்...

மற்ற அம்மாக்கள் எப்படியோ... அருணாவின் தாய்க்கு சத்தியமாய்த் தெருவில் இறங்கினால் கிழக்கு எது, மேற்கு எது என்று கூடத் தெரியாது... அத்தனை பரமார்த்தி....

அப்பா இருந்தவரையில் அம்மாவுக்கு ஒரு குறைச்சலில்லை. வீட்டுப் பொறுப்பைத் தவிர, வெளியுலகம் எப்படியிருக்கும் என்றே அவளுக்குத் தெரியாது... எங்கேயாவது கிளம்ப வேண்டுமானால் கடிவாளம் போட்ட குதிரை மாதிரி, புருஷன் பின்னாலேயே போவாள். அது சினிமாவானாலும் சரி,... கோவிலானாலும் சரி... கணவனை விட்டு வெளியே கிளம்புவது என்பது இந்த நாலைந்து மாதங்களாகத்தான்...

என்ன செய்வது... பெண்களுக்குத் திருமணம் செய்ய வேண்டிய பொறுப்பை அவள் தலையில் சுமத்தி விட்டு அவர் போய்ச் சேர்ந்து விட்டாரே...

பணம் காசுக்குக் குறைவில்லை... ஓஹோ என்றில்லா விட்டாலும் இருக்கிறதை வைத்துக் கொண்டு இரண்டு பெண்களுக்கும் நிரக்கச் செய்ய முடியும்... முதல் பெண்ணுக்கும் பிள்ளைக்கும் அப்பா இருந்த காலத்திலேயே எல்லாம் கச்சிதமாய் முடிந்துவிட்டது. இன்னும் இரு பெண்களும், இரு பிள்ளைகளும் பாக்கி...

பிள்ளைகளைப் பற்றிக் கவலையில்லை. இப்பொழுது தான் கல்லூரியிலும், பள்ளியிலுமாகப் படிக்கிறார்கள். மேலும் படித்து முடித்து, ஒரு வேலை கிடைத்தவுடனேயே பெண்ணைப் பெற்றவர்கள் காக்காய் கூட்டமாய் இவர்களைச் சூழ்ந்து விடுவார்கள்...

பெண்கள்...?

இவர்களுக்காக யார் வரன் தேடுவது? யார் ஜோசியரிடம் போய்ப் பொருத்தம் பார்ப்பது? யார், பிள்ளை வீட்டுக்குப் பொருந்திய ஜாதகத்தை எடுத்துக் கொண்டு அலையாய் அலைவது...

பெரியவன் ஹைதராபாத்தில் இருக்கிறான்... அங்கேயே ஏதோ வரன் தேடுவதாக ஒவ்வொரு கடிதத்திலும எழுதுகிறான். பெரிய மாப்பிள்ளையோ உள்ளூரில் தான் இருக்கிறார். அவரைப் பொறுத்தவரையில் ஏதோ தன் பங்குக்கு நாலைந்து ஜாதகங்களை அவ்வப்பொழுது சப்ளை செய்கிறார்.

இதெல்லாம் போதுமா?...

அம்மாவே வெய்யிலைப் பார்க்காமல், மழையைப் பார்க்காமல் கிளம்பிவிட்டாள். அவள் பொறுப்பு அவளுக்குத் தானே தெரியும்... பெண்ணுக்கு மாத்திரமில்லை... அவளுக்கும் முதுமை ஏறிக் கொண்டே போகிறதே...

இவளது ஜாதக வேட்டைக்குத் துணை, இளையமகள் அருணாதான்....

''நீ வரயாடீ...''

''எங்கேம்மா...''

''மாப்பிள்ளை சில ஜாதகங்களைக் கொண்டு வந்து தந்திருக்கார்... அதுல ரெண்டு மூணு பொருந்தற மாதிரி இருக்காம்... அவா வீட்டுக்குப்

போய் விசாரிச்சுட்டு, அப்படியே இந்த சங்கரமடம், மகாலிங்கபுரம், பின்னே யார் கோவில் இங்கேயெல்லாம் போயிட்டு வரலாம்''

''என்னம்மா நீ.. மகாலிங்கபுரம் எங்கேயிருக்கு... சங்கரமடம் மைலாப்பூர்லே இருக்கு... எப்படி அலேவே... அங்கேயெல்லாம் எதுக்குப் போகணும்''

''அங்கே நிறைய வரன்களோட அட்ரஸ் தராளாம்.''

''சரிவிடு... அதெல்லாம் பார்த்து நான் வாங்கிண்டு வரேன்...''

அருணவுக்கு அம்மா இப்படிவெய்யில் அலேவது கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லே...

எப்படியிருந்தவள் — அப்பாவின் மறைவுக்குப் பின் என்னமாய் தேய்ந்து விட்டாள்....

அவள் சிரித்தால் குழந்தை மாதிரி நிஷ்களங்கமாய் இருக்கும். அப்பா

மைதாமாவில் சிறிது உப்புடன் மிகக் குறைவாக நீர்விட்டு உதிர் உதிராகப் பிசைந்து குக்கரில் அப்படியே 15 நிமிடங்கள் வேக வைத்து ஆறியபின் உதிர்த்து தேங்காய்த் துருவல், வறுத்த முந்திரி சேர்த்து கலக்க, சுவையான புட்டு சில நிமிடங்களிலேயே தயார்!

சீதாலட்சுமி.

எது சொன்னலும் வேத வாக்கு.... கடைசி வரையில் தனக்காக ஒரு புடவை எடுக்கக் கூட அவள் தனியே போனதில்லே...

'இவளுக்கென்று தனி அபிப்பிராயமே கிடையாதோ...' — இப்படி அருண அடிக்கடி நினைப்பதுண்டு....

''அடியே மீண, அருண இன்னிக்கு சினிமாத் தியேட்டர்லே ஒரு தமாஷ்.. நீங்க கவனிக்கலேயே...''

அப்பா, அம்மாவையும் வைத்துக் கொண்டு குழந்தைகளிடம் கண்களைச் சிமிட்டியபடி சொல்லுவார்.

''என்ன... என்ன...''

''சினிமாவுல மாரியம்மன் வர்ற சீன்லே விளையாட்டுக்காக உங்கஅம்மா கிட்ட, கன்னத்துல போட்டுக்கலேயான்னு கேட்டேன்... உடனே, பட் பட்டுனு கன்னத்துல போட்டுக்கறு..''

''ஐயோ... ஐயோ... அது நிஜ சாமி இல்லே. கே. ஆர். விஜயா...''

குழந்தைகள் ஆர்ப்பாட்டமாய்ச் சிரித்து, தாயைச் சுற்றி வந்து கேலி செய்வார்கள். அப்பா, புன்னகை யுடன் இக்காட்சியைப் பார்த்துக் கொண்டு நிற்பார்.

அப்பேர்ப்பட்ட அப்பாவி அம்மா, தெருத்தெருவாய் வரன் தேடி அலேவ தாவது...

''நானே போறேன்...''

—அவள் குதிக்க, அம்மா இதில் மாத்திரம் கண்டிப்பாய் இருக்கிறுள்.

''நன்னுயிருக்கு. நீ சின்னவ. அக்காவுக்கு மாப்பிள்ளே தேடி நீ போனு, பார்க்கறவா என்ன நினேப்பா? நான் ஒருத்தி எதுக்கு இருக்கேன்? நானும் வரேன்... நீ துணைக்கு வா. போதும்...''

காலே ஒன்பது மணிக்குக் கிளம்பியவள், மாலே வீடு வந்து சேர்வதற்குள் துணியாய்த் துவண்டு போய் விட்டாள்...

ஒரு வீட்டிலும் சரியான பதில் இல்லே. முதலாவதாகத் தங்கள் பிள்ளை கல்யாணத்துக்கு இருக்கிருன் என்கிற விஷயத்தையே கள்ள மார்க்கெட்டில் விற்பதற்காகச் சர்க்கரையையும், குழந்தைகள் பால் டின்னேயும் பதுக்குவது போல் பிடி கொடுக்காமலேயே பேசிஞர்கள்...

பல இடங்களில் வீட்டுக்குள்ளேயே அனுமதிக்கவில்லே... வாசலில் நிறுத்தி வைத்தே ஆயிரம் கேள்விகள். அதுவும் பிள்ளையைப் பெற்ற புண்ணியவதிகளே...

''உங்களுக்கு யாரு எங்க அட்ரஸைக் கொடுத்தது?''

''சங்கர மடத்துல...''

''அப்படியா... அங்கே நாங்க கொடுக்கவே இல்லே. ஒரு வேளே எங்க உறவுக்காரா யாருக்காவது கொடுத்திருப்பாளாயிருக்கும். உம்.... பொண்ணு என்ன படிச்சிருக்கா?''

''பி. ஏ...''

''என் பிள்ளே போஸ்ட் கிராஜுவேட். கேட்கருன். வேலேக்குப் போருளா...''

''வேலே... எங்க கிடைக்கறது?''

''அதுசரி. ஆனு அவன் இது விஷயத்துல ரொம்பவும் கண்டிப்பு.... வேலேக்குப் போற பொண்தான் வேணுமாம்...''

''எதுக்கும் நீங்க ஜாதகம் தாங்கோ... நானும் என் பொண்

ஜாதகத்தைத் தரேன்... பிராப்தம் இருந்தா...''

''அய்யய்யோ... எங்க அகத்துக்காரர் வெளியிலப் போயிருக்கார்.... இதையெல்லாம் நான் வாங்கி வச்சுண்டா என்னைத்தான் திட்டுவார். நீங்க சாயங்காலமா வாங்களேன். அனேகமா நான் சொன்னதைத்தான் அவரும் சொல்லுவார். எங்க பிள்ளைக்குப் போஸ்ட் கிராஜுவேட்டா, வேலைக்குப் போற பொண்ணும் வேணும்...''

''அம்மா... வா போகலாம்...''

அருணா, தன் தாயின் கையைப் பிடித்து இழுக்காத குறை... இத்தனை நேரம் வெளியில் நிற்க வைத்துப் பேசியதால் அவளது முகமும், கண்களும் ஜிவுஜிவுத்துப் போகிறது.... அம்மாவுக்கும் இதே நிலைதான்.... ஆனால், வாய்விட்டு, எதுவுமே சொல்லிக் கொள்ளவில்லை.

''அம்மா... டயர்டா இருக்கா.... ஜூஸ் ஏதாவது சாப்பிடறியா?''

''நேக்கு எதுவும் வேண்டாம்டி, பொண்ணே... நீ சாப்பிடு. காலம்பற ரெண்டு பருக்கை சாப்பிட்டது...''

அப்பா இறந்ததிலிருந்து அம்மா வெளியில் எதுவுமே சாப்பிட்டதில்லை. கொளுத்தியெடுக்கும் பசியானாலும்வீடு வந்துதான் கைநனைப்பாள். அப்பேர்ப்பட்டவளுக்கு ஜாதகம் கிடைக்காவிட்டாலும் ஒரு வீட்டிலாவது உள்ளே அழைத்து, உட்கார வைத்து, ஒரு தம்ளர் தண்ணீர் கூட யாரும்கொடுக்காத போது... உண்மையிலேயே அருணாவுக்கு இந்தக் கல்யாணச் சம்பிரதாயங்களின் மீது தாள முடியாத வெறுப்புதான் ஏற்படுகிறது....

''மீனுவுக்கு எப்படியோ கல்யாணத்தைப் பண்ணிடும்மா. எனக்கு வேண்டாம்....''

''ச்சீ அசடு... இதெல்லாம்சகஜம். பொண்ணைப் பெத்தவா, எல்லா அவமானங்களையும் சகிச்சுண்டுதான் போகணும்...''

''அதுக்காக இப்படியா... பிச்சைக்காரிய விரட்டற மாதிரி விரட்டுவா... அண்ணாவுக்காகப் பொண்ணைப் பெத்தவா வந்தப்ப நீ இப்படியா நடந்துண்டே? அவாளுக்கு ஓடி ஓடி உபசாரம் பண்ணலை? கல்யாணத்துல, சின்ன விஷயத்துக்குக் கூட அவா கிட்டத் தகராறு பண்ணக் கூடாதுன்னு எத்தனை ஜாக்கிரதையாய் இருந்தே?''

''அதுமாதிரியே எல்லாரும் இருப்பாளாம்மா... எனக்குக் கூடத்தான் மனசுக்குள்ள துக்கம் பொங்கறது.... உங்க அப்பா இருந்தா, இப்படி நான் நாயா அலைய வேண்டி வருமான்னு... இதுக்காகப் பார்த்தா, குழந்தைகள் கல்யாண வயசைத் தாண்டிப் போய் நிக்கற கோலத்தை யார் சகிச்சுக்கறது...''

அன்று அம்மா இப்படிச் சொன்ன பிறகு, அருணா வாயே திறக்கவில்லை.

அன்று காலை முதலே போன இடங்கள் எதுவுமே சரிப்பட்டு வரவில்லை. எல்லாம் பக்கத்தில் பக்கத்திலா இருக்கிறது. பொடி நடையாய் நடந்து போய் விசாரிப்பதற்கு....

**அல்வா ரகசியம்**

திருநெல்வேலி அல்வாவைப்போல வீட்டு அல்வா கத்திபோட்டு அறுக்க வரவில்லையே என்ற கவலை வேண்டாம். பாலை (கோதுமை) இறுத்து மேலாக நிற்கும் நீரில் சர்க்கரைப்பாகு வையுங்கள். முதல் தரமான அல்வா கிடைக்கும். **"சித்ரா"**

ஒன்று அடையாறில்; இன்னொன்று கே. கே. நகரில்... ஒரு வரன் பிருத்வி அவின்யு; மற்றொன்று புரசைவாக்கம்..

அடடா... இந்த மாப்பிள்ளை வீடுகளைத் தேடிக் கண்டுபிடிப்பிதிலேயே பாதி ஆயுசு ஓடிவிடும்போல இருக்கிறதே...

அடையாறில், இவர்கள் போன வீட்டில் அன்றைக்கு ஜாதகம் தரமாட்டேன் என்று கூறி விட்டார்கள்..

''புதன்கிழமைதானே... பொன் அகப்பட்டாலும் புதன் அகப்படாதுன்னு சொல்லுவா...''

—இது அம்மா.

''எங்களுக்குப் புதன் ஆகி வர்றதில்லே...''

—இது பிள்ளையின் தாய்.

பிருத்வி அவின்யூவில் இவர்கள் போன வீடே பெரிசு. அத்தனை

பெரிய வீட்டில் அம்மாவும் ஒரு பொண்ணும்தான். உள்ளே நுழையவே தயக்கமாக இருந்தது அருணவுக்கு...

வரன் கல்கத்தாவில் வேலை பார்க்கிறானும்... வயசு நாற்பத்தி மூன்றும்... மீனுவுக்கு இருபத்தியெட்டுதான்.... அந்தக் கணமே அந்த இடம் வேண்டாமென அவள் மனசுக்குள் தீர்மானித்து விட்டாலும், அம்மாவுக்குத்தான் மனசு கேட்கவில்லை.

'ஒருவேளை இதுதான் மீனுவுக்குப் பிராப்தமோ என்னமோ...'

பெரிய கூடத்தில், விஸ்தாரமான சோபாவில் இருபத்தைந்து வயது மதிக்கத் தகுந்த பெண்... அம்மாக்காரி அதே கூடத்து ஊஞ்சலில் பூனைத் தூக்கத்தில்...

''வரன் விஷயமா...''

அருணா இழுக்கும் முன்பே அவள் சடபடவெனக் கேள்விகளை ஆரம்பித்து விட்டாள்.

''எங்க அண்ணா இப்ப பண்ணிக்கறதா இல்லையே...''

''ஓ... அப்ப சரி...''

''இருங்கோ... பொண்ணுக்குளென்ன வயசாறது...''



''இருபத்தியாறு முடிஞ்சு வர்ற ஆவணிக்கு.....''

அசட்டு அம்மாவை எரிப்பதுபோல பார்க்கிறாள் அருணா. அம்மா என்றுமே வயசைக் குறைத்துச் சொல்ல மாட்டாள். ஆயுசு குறைந்து விடுமாம். பயம்....

''இருபத்தியாறு... தட் இஸ் டூ ஓல்ட்.... இருபத்தஞ்சுக்குள்ளேன்னா பார்க்கலாம்....''

இப்படிச் சொன்னவளை உறுத்துப் பார்க்கிறாள் அருணா. உதடு துடிக்கிறது....

''நான் கேட்கறேன்னு தப்பா நினைச்சுக்கக் கூடாது. உங்களுக்குக் கல்யாணமாயிடுத்தா?''

''இன்னும் இல்லே.. இன்ஃபாக்ட் எனக்குக் கல்யாணமானதுக்கு அப்புறம்தான் அண்ணா கல்யாணம் பண்ணிக்கறதா இருக்கான்.''

''ரொம்ப சரி. உங்களுக்குஇருபத்தைஞ்சு வயசு இருக்குமா?''

''இது என்ன கேள்வி?''

''உங்க அண்ணா உங்களுக்கு நாப்பது வயசுக்காரப் பிள்ளைய புருஷனா மணையில உட்கார்த்தி வைக்கச்சம்மதிப்பாரா...''



''அருணா!''

அம்மா, சட்டென மகளின் கையைப் பிடித்து அழுத்தி, வெளியே இழுத்து வருகிறாள்...

''பின்னே என்னம்மா? நாளைக்கு தனக்கும் இப்படித்தான் மாப்பிள்ளை தேடி தன்னோட அண்ணாவும், அம்மாவும் அலைய வேண்டியிருக்கும்கற ஸ்மரணையே இல்லாம என்னமாப் பேசறது பாரு அந்தப் பொண்ணு...''

''கல்யாணப் பையனோட தங்கை... நாத்தனார்ங்கற ஹோதாவுல அப்படித்தான் பேசுவா.... நாம அதுக்காகப் போய் கோவிச்சுக்கலாமா.... பொண்ணைப் பெத்தவா... எல்லாத்துக்கும் பொறுத்துப் போய்தான் ஆகணும்...''

அம்மா, வருகிற வழியெல்லாம் புலம்பிக் கொண்டே வருகிறாள்.

பிரசவத்தின்போது வயிறு சுட்டாமல் பெரிதாகி, கர்ப்பிணி போல தோற்றம் அளிப்பவர்கள் தினம் 1 வேளை செம்பரத்தைப்பூ கஷாயத்தில் பால், சர்க்கரை சேர்த்து சாப்பிட்டு வரலாம். மஞ்சள்கரிசலாங்கண்ணியைப் பருப்பும் போட்டு சமைத்து 25 நாட்கள் சாப்பிட்டு வந்தால் வயிற்று உப்புசம் குறையும்.

பத்மா.

புரசைவாக்கத்தில் போன வீடோ, மழைச் சகதியில் அந்தத் தெருவுக்குள் போவதே பெரிய காரியமாய்....

தழைந்த வீடு... அருணா தன்கையிலிருந்த விலாசத்தைப் பார்க்கிறாள்:

''கோபால கிருஷ்ணன்...''

மாப்பிள்ளைப் பிள்ளையாண்டானின் பெயரிலேயே விலாசம்.

'அப்பா கிடையாதோ...'

வீட்டுக் கூடத்துக்குள் இவர்கள் நுழையும் வரையில் யாரும் எதுவுமே கேட்கவில்லை... வீடு நிறையப் பெண்கள்... அனேகமாய் ஒவ்வொன்றின் ... ...ம் மஞ்சள் சாடு

நாற்காலி மனிதர் அருணாவையும், அம்மாவையும் பார்த்தாரே தவிர வேறெதுவும் விசாரிக்கவில்லை. அது என்னமாத்தான் முகத்தை அத்தனை கடுப்பாக வைத்துக் கொள்ள முடிந்ததோ...

கூடத்தை அடுத்த சமையலறைப் போன்ற அறையிலிருந்து ஒரு பெண் தட்டு நிறைய இட்லிகளுடன் எட்டிப் பார்க்கிறாள்.

''யாரு...''

''இங்கே கோபாலகிருஷ்ணன்னு..''

''எங்க தம்பிதான்...''

''அவர் ஜாதகம் வேணும்... எம் பொண்ணுக்கு... இவ மூணாவது பொண்ணு. அவ ரெண்டாவது பொண்ணு...''

அம்மாவின் சுட்டைவிரலைப் பிடித்தழுத்தி 'போதும்' என்பது போல எச்சரிக்கிறாள் அருணா.

இன்னமும் அவர்களை யாருமே உட்காரச் சொல்லவில்லை...

'காயத்ரி' இளைஞன் டி. வி. யில் ஒரு கண்ணும் அருணாவின் மீது மறு கண்ணுமாக ஜபித்துக் கொண்டிருக்க, முறுக்குக் குலையாத மாப்பிள்ளை, அங்கே குறுக்கும்நெடுக்குமாய் அலையும் மைத்துனிகளையும், நடுநடுவே அருணாவையும், அவளை காயத்ரி பையன் கடைகணிப்பதையுமே விறைக்க, விறைக்கப் பார்த்துக் கொண்டிருக்க...

இட்டிலித் தட்டுடன் எதிர்ப்பட்ட பெண் — சமையலறைக்கும் கூடத்துக்கும் இடைப்பட்ட தூரத்திலேயே அயிட்டங்களைப் பரத்தி வைத்துக் கொண்டு உட்காருகிறாள். தட்டிலிருந்த இட்லிகள் நிமிஷமாய்க் காலியாகி, அடுத்த ஈடும் வேகமாய் உள்ளே இறங்கிக் கொண்டிருக்க — கேள்விகள் படு உற்சாகத்துடன் வந்து விழுகின்றன...

''பொண்ணு சேப்பா இருப்பாளா...''

''ரொம்ப சேப்பு இல்லே.... மாநிறம்...''

''அடியே நா...

அஷ்டாவதானம் செய்கிறாள்... இதற்குள் அங்கே வந்த தன் தாயிடமும் நறுக்கென நாலு வார்த்தை....

''ஜாதகம் கேட்டு வந்திருக்கா.... அதான் என்ன செய்வேன்னு கேட்டுண்டு இருக்கேன்.. ''

பிள்ளையின் தாய் முகத்தில் நிரந்தர அலுப்பு விழிகளில் மாத்திரம் கன்னென்ற கோபம்.

''இதைக் கேட்பானேன். 'சும்ம 'டெர்ம்ஸை' சொல்லிட வேண்டியது தானே...''

''அதை நான் சொல்வானேன். அப்புறம் மூத்த பொண்ணு பொல்லாதுன்னு பேரைச் சுமப்பானேன். போறும். போறும்... நிறைய பட்டாச்சு. பிட்லேயிலே போய் நாலும் கிழமையுமா பாவக்காயா... ஏன், நாலு கத்தரிக்காய வெட்டிப் போட றது .''

சாப்பிட்டு முடித்த பின்னும் இலையை விட்டு எழுந்திருக்காதபடி அவள் ஸ்திரமாய் உட்கார்ந்திருக்க, பெண்ணிடம் பேச்சுக் கேட்ட எரிச்சலும் சேர, அந்த அம்மாள் முகத்தை கடுகாய் சிறுத்தபடி சொல்கிறாள்.

''மாமி... எனக்கு வழவழா கொழ கொழா சமாச்சாரமே பிடிக்காது. ஒரே பிள்ளை எனக்கு. எட்டுப் பொண்ணு. இன்னும் கல்யாணத்துக்கு மூணு பேர் இருக்கா...நாட்டுப் பொண் வந்து என் குடும்பம் பிரிஞ்சதுன்னு இருக்கப்படாது...''

''அதெல்லாம் என் பெண்ணைப் பத்தி நானே சொல்லக் கூடாது...''

அம்மா திணறியபடி இழுக்கிறாள்.

''எல்லாம் ஆரம்பத்துல இப்படித்தான்... போகப் போக நாங்கன்னு சொல்லணும்... பொண் உசரம் என்ன...''

''அந்த ரெண்டு...''

''மந்திரத்தை ஒழுங்காச் சொல்லுடா...''

''சரி சித்தப்பா...''

அருணா தர்மசங்கடத்துடன் நெளிகிறாள். வரனின் தாய், ஜாதகத்தைக் கொடுக்காமலேயே, எதிராளியைத் தூண்டித் துருவி விசாரிக்க...

''இவ கடைசியா?''

''இல்லே... இவளுக்கு அடுத்து.... இதோ, இவ...''

''உம். இவ அப்பா எப்ப போனார்...''

''இப்பத்தான்.. ஒரு வருஷம் முடிஞ்சது...''

''கல்யாணத்துக்குப் பணம்...''

''தஞ்சாவூர்லே கொஞ்சம் நிலமும் வீடும் இருக்கு. போறுததுக்கு அவ ரோட சேமிப்பு, பெரிய பிள்ளை லோன்... இதெல்லாத்தையும் வச்சுந்தான்...''

பெண்களுக்கு ஒவ்வொரு மாதமும் மாதவிடாய் வருவதற்கு முன்பு வயிற்று வலி ஏற்பட்டால், மாத விடாய் வருவதற்கு 4 நாட்களுக்கு முன்பே முருங்கை இலையை இடித்துப் பிழிந்த சாறை வெறும் வயிற்றில் காலேவேளையில் சாப்பிட்டு வந்தால் வயிற்று வலியே வராது.

பத்மா.

''இவளுக்கே இத்தனை சிரமம்னு.... ரெண்டாவதுக்கு...''

''....''

''நகை ஏதாவது ரெடியாஇருக்கா? இல்லே, எல்லாமே இனிமேத்தானு.''

''வைரத்தோடு, நெக்லஸ், ரெட்டைவடம் சங்கிலி ரெடி....''

''வைரத்தோடு எத்தனை

ஒரு கேள்வி, தலைக்கு ஒரு அபிப்பிராயம்.

''வேலைக்குப் போகலையா... ஏன்? ஏன் போகலே?''

'' எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்லே பேரை கொடுத்திருக்காளோன்னோ....''

''மூக்குக் குத்திப்பாளா ?''

''எங்க குடும்பத்துக்கு வந்தா கண்டிப்பா மூக்குக் குத்திண்டேயாகணும்''

''தலைமயிர் நீளமா இருக்குமா.''

''பாடுவாளா ...''

''பாட்டு எதுக்குடி... சமைப்பாளான்னு கேளு. .''

''இதோ, உங்க கடைசி பொண் [redacted]

பார்த்தாச்சு. அனேகமா நான்சரின்னு சொல்ல வேண்டியதுதன் பாக்கி.... அவாளுக்கும் எங்களுக்கும் பத்தாயிரத்துல நிக்கறது... யாரானு என்ன....? ஜாதகம் சேர்ந்தா வந்து சொல்லுங்கோ.... டெர்ம்ஸ் சரிபட்டு வந்தா முடிக்கறதுல எந்த ஒரு ஆட்சேபணையுமில்லே....''

அருணா, அம்மாவின் கையைப் பிடித்தபடி எழுந்து விட்டாள்....

வாசல் வரை வந்தவர்களின் பின்னாலேயே நிழல் மாதிரி காயத்ரி இளைஞன்.

அம்மாவுக்குத்தான் [redacted]

## சில நிமிடங்களில் சுவையான
## சிற்றுண்டி சமைத்தளியுங்கள் உங்கள் குடும்பத்தாருக்கு!

# ஸ்ஃபியர்ஹாட்

# ஸாண்ட்விச் டோஸ்ட்மேக்கர் உபயோகியுங்கள்.




ஸ்ஃபியர்ஹாட் ஸாண்ட்விச் டோஸ்ட்மேக்கர் உதவியுடன் திருப்தியான சுவையான விருந்தளிப்பீர். விதவிதமாய் விருப்பமான பொருள் சேர்த்து முறுமுறுவென சுடச்சுட சுவையாக தயாரித்து அளியுங்கள்.
பார்வைக்கு நளினமான இந்த டோஸ்ட்மேக்கர், தானாக இயங்கும் தர்மோ-ஸ்டாட் கன்ட்ரோல் உடையது. டெஃப்லான் கோட்டிங் செய்யப்பட்டது.
ஆகவே, ஸாண்ட்விச், டோஸ்டரோடு ஒட்டிக்கொள்ளாது.
எளிதாக பயன்படுத்தலாம்.
இலகுவாக சுத்தப்படுத்தலாம்.
உங்கள் வீட்டிற்கு சாலச் சிறந்தது.
அன்பளிப்பாய் அளிக்க அருமையான பொருள்.



[redacted]

ஒவ்வொரு பிறப்பும் இறப்பும் கட்டாயமாகப் பதிவு செய்யப்பட வேண்டும்



# ஏன் தெரியுமா

## அவ்வாறு செய்வது, பின்வருபவற்றுக்கு உதவியாக இருக்கும்:

பிறப்புச் சான்றிதழ் பலவற்றுக்கு சான்றாக இருக்கும்:

- பள்ளிக்கூடத்தில் சேர
- மோட்டார் ஓட்டும் லைசென்ஸ் பெற
- பாஸ்போர்ட் பெற
- வேலை வாய்ப்பு பெற
- ஓட்டுரிமை பெற
- இன்ஷ்யூரன்ஸ் பாலிசி எடுக்க.

பின் வருபவற்றுக்கு இறப்புச் சான்றிதழ் தேவைப்படும்:

- சொத்துக்கு வாரிசுரிமை பெற
- சொத்துரிமை குறித்த தீர்ப்புப் பெற
- இன்ஷ்யூரன்ஸ் தொகையைப் பெற

## இது நாட்டுக்கும் உதவுவதாக இருக்கும்

நாட்டுக்கு, பிறப்பு, இறப்பைப் பதிவு செய்வது, எதிர்கால சுகாதாரத்திற்கும் சிறந்த வாழ்க்கைக்கும் முன்கூட்டியே திட்டமிட, அடிப்படைத் தகவலாக உதவுகிறது.

## தயவு செய்து மறக்காதீர்கள்

1969 பிறப்பு மற்றும் இறப்பு குறித்த சட்டத்தின்படி பிறப்பு, இறப்பை பதிவு செய்தல் கட்டாயமாகும்.

---

**பிறப்பையும் இறப்பையும் உரிய காலத்தில் பதிவு செய்யத் தவறாதீர்கள்**

பதிவு செய்ததற்கான சான்றிதழை பெற்றுக் கொள்ளுங்கள். இது இலவசமாகக் கிடைக்கும்.

பதிவு செய்ய தாமதமாகி விட்டாலும் அனுமதிக்கப்படும்.

---



ரெஜிஸ்ட்ரார் ஜெனரல், இந்தியா

davp 83/246- Tam

பொண்கள் இல்லேயோ.... இப்படியா நடத்துவா.....''

மறுநாள் சாப்பாடு முடிந்ததும், மனசே இல்லாமல் தான் அருணா வுடன் கிளம்பினாள் அம்மா. முகத்தில் சுரத்தேயில்லே.

''இன்னிக்கு எங்கே....''

''அபிராமபுரம்...''

அருணா சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே மீனு, சமையலறையி லிருந்து எட்டிப் பார்க்கிறாள்.

''போதும்மா. எனக்குக் கல்யாணம் கல்யாணம்னு வெய்யில்லே அலேஞ்சு உடம்பைக் கெடுத்துக்காதே...''

அவ்வளவுதான். அம்மாவுக்குளங்கே யிருந்துதான் அத்தனே ரோஷம் வந் ததோ.... விடுவிடெனக் கிளம்பி விட் டாள்.

''உன்னே வீட்டுல உட்கார்த்தி வச்சுண்டு, என் உடம்பை தேத்திக் கணுமா நான்.... பொண்ணுக்குக் கல்யாணமாகாம, பெத்த பிள்ளே யாவே இருந்தாலும் அவன் கிட்ட பொறுப்பை ஒப்படைச்சுட்டுப் போறதைவிடக் கேவலம் வேற இல்லேடீ... உங்கப்பாவைத் தான் அவசரப்பட்டு எமன் அழைச்சுண்டுட் டான். நான் அத்தனே சீக்கிரம் போக மாட்டேன். கிளம்புடி அருணா...''

அபிராமபுர வீட்டிற்கு, இவர்கள் போன போது சாப்பாட்டு நேரம்.... உள் பக்க டைனிங் ஹாலில் பேச்சும், சிரிப்பும் அமர்க்களப்படுகிறது....

பத்து வயசு சிறுமி ஒருத்தி, இவர் களே ஹாலில் சோபாவில் உட்காரச் சொல்லி விட்டு உள்ளே ஓடுகிறாள்....

அருணாவுக்குச் சூழ்நிலேயே ஒரு மாதிரியாக... சோபாக்களில் சினிமாப் பத்திரிகைகளும், சுவர் முழுக்க சினிமா ஸ்டில்ஸும், ஒரு மேஜை மீது டெலிபோனும், மேஜை இழுப்பறை சரிவர மூடப்படாமல் அதில் திணறி வழியும் அலங்காரச் செருப்புகளும்...

அம்மா திறந்து கிடந்த பத்திரிகை யின் நடுப்பக்க நட்சத்திரத்தைப் பார்த்துக் கண்ணே மூடிக் கொள் கிறாள்.

''சிவ சிவ...''

அருணா, சுவரிலிருந்த புகைப்படங் களே அருகில் சென்று பார்த்துவிட்டு தாயிடம் பரபரப்புடன் வந்துகாதோடு கிசுகிசுக்கிறாள்...

''அம்மா, அந்த போட்டோவுல இருக்கறது யாரு தெரியுமா?...''

''யாரு...''

''பத்து வருஷம் முந்தி ரொம்ப ஃபேமஸாஇருந்தாளே...சினிமாஸ்டார் பத்மஜா... நீ கூட அவ நடிச்சுப் பார்த்திருக்கே... முதல்லே குழந்தை நட்சத்திரமா அறிமுகமாணு... அப் புறம் செகண்ட் ஹீரோயின்...ரெண்டு மூணு படத்துல ஹீரோயின்... நல்ல




முகவெட்டு, நடிப்பு இருந்தும் அவளே சரியா யூஸ் பண்ணிக்கலே...''

அம்மா, அருணாவின் வார்த்தைகள் எதுவுமே புரியாமல் பிரும்மமாய் உட்கார்ந்திருந்தாள்...

''அம்மா... சினிமா நடிகை வீட்டு லயா நாம ஜாதகம் கேட்க....''

சொல்லவந்ததை அவள் சொல்லி முடிக்கவில்லே... அதற்குள் உள்ளே யிருந்து பத்மஜாவே வந்து விட் டாள்...

நல்ல சிவப்பு... இன்னமும் கட்டுக் குலேயாத தேகம்... பழைய, இழை விட்டுப் போன நைலக்ஸ் புடவை தான்... அதை மிக நாசூக்காய், கிழிசல் தெரியாமல் கட்டியிருந் தாள்...

''வாங்கோ...''

அவள் கைகுவித்து வணங்கிய போது அம்மாவுக்குப் பதில் வணக்கம் சொல்லக் கூடத் தோன்றவில்லே. அருணாதான் சமாளித்துக் கொண்டு தாங்கள் வந்த விஷயத்தைச் சொல் கிறாள்...

''மணிங்கறது... அட்ரஸ் சங்கர மடத்துல கிடைச்சது...''

''என் தம்பிதாம்மா... அம்மா சாப்பிட்டுண்டு இருக்கா. வரட்டும். ஜாதகம் தரச் சொல்றேன். நல்ல வெய்யில்லே வந்திருக்கேளே... மோர் சாப்பிடுவேளா.... ஜனனி...''

இவர்களின் பதிலுக்குக் காத்திராமல் உட்பக்கம் பார்த்துக் குரல் கொடுக்க, முன்பு பார்த்த அதே பத்து வயசு சிறுமி, புன்சிரிப்புடன் எட்டிப் பார்க்க...

திருமணமான பெண்கள் கணவனோடு கலந்திருந்து பிறகு குழந்தைக்குத் தாய்ப்பால் கொடுப்பதால் தான் குழந்தைக்கு 'மாந்தம்' ஏற்படுகிறது. காரணம் கணவனது அணைப்பினால் மனைவியின் மார்பகக் காம்பில் ஒருவிதக் காமநீர் சுரக்கிறது. இந்த நீரை விரலினால் கறந்து மார்பகத்தை கழுவியபின் குழந்தைக்கு பாலூட்டுவதால் 'மாந்தம்' ஏற்படுவதை தடுக்கலாம். இந்த நீர் குழந்தையின் வயிற்றில் செரிக்காததின் காரணத்தால்தான் மாந்தம் ஏற்படுகிறது. இதற்கான மருத்துவம்: மாந்தக் கட்டை என்பது தமிழ் மருந்துக்கடைகளில் கிடைக்கும். வேப்பெண்ணெய் ஊற்றி அகல் விளக்கை ஏற்றி அந்த மாந்தக் கட்டையை சிறிது வேப்பெண்ணெயில் நனைத்து விளக்கில் காட்டவேண்டும் அதிலிருந்து எரிந்து விழுகிற எண்ணெயில் நாலைந்து சொட்டுக்களை சந்தனக் கல்லில் சேகரித்து எரியும் அந்தமாந்தக் கட்டையால் அதைத் தேய்க்க வேண்டும். இந்த எண்ணெயை விரலால் வழித்து, மாந்தம் உள்ள குழந்தையின் நாக்கில் மூன்று தடவை தடவி விட்டுப் பின்பு தாய்ப்பால் கொடுக்கலாம், இதே எண்ணெயைக் குழந்தையின் முழங்கால்களின் பின்புறம், மற்றும் நரம்புகள் தெரியுமிடங்களில் தடவலாம்.

மாந்தத்துக்கு இதைத் தவிர வேறு கைகண்ட மருந்து தேவையில்லை.

மிஸஸ் ஸ்ரீஞானந்த்.
('தமிழ் மருந்துகள்' என்னும் நூலிலிருந்து)

''இவாளுக்கு ஜில்லுனு மோர் கொண்டாயேன்...''

அவளிடம் சொன்ன கையோடு, அருணாவைத் திரும்பிப் பார்த்துப் புன்னகைக்கிறாள்.

''எங்க அக்கா பொண்...''

''ஓ...''

''மணியப்பத்தி சொல்லலையே.... அவன் எங்களுக்கு ஒரே தம்பி தான்... பி. யு. சி. தான் படிச்சிருக்கான். அதிகம் படிக்கல்லே... சரிப்பட்டு வருமான்னு பாருங்கோ.... எங்களுக்கு எந்தவித ஆட்சேபணையுமில்லே. பின்னாடி ஒரு காம்ப்ளக்ஸ் வரக் கூடாது... அவன் சம்பளம் ஆயிரம் ரூபாதான். எங்க ஃபேமிலிக்கு இப்போதைக்கு அவன் தான் தூண்... வர்றவ, இதோ இந்த சூழ்நிலைய அட்ஜஸ்ட் பண்ணிண்டு இருக்க வேண்டியிருக்கும்... கொஞ்சம் கஷ்டம் தான். ஆனா ஒண்ணு... என் தம்பி நல்ல பிள்ளை... ஒரு கெட்ட பழக்கம் கிடையாது....''

இவள் பேசிக் கொண்டிருக்கும் போதே மோர் வருகிறது... பத்மஜா, எதிரில் இருந்த டீபாயின் மீது இறைந்து கிடந்த பத்திரிகைகளை அடுக்கி ஒரு பக்கமாய் வைத்துவிட்டு மோர் தம்ளர்களை அதில் வைக்கிறாள்.

''நல்ல வெய்யில்லே, பாவம்.... வயசானவாளை அழைச்சுண்டு வந்திருக்கியேம்மா...''

இப்படி அருணாவிடம் உரிமையுடன் கடிந்து கொள்கிறாள்.... அவர்கள் குடும்பத்தைப் பற்றி அக்கறையுடன் விசாரிக்கிறாள். தன் குடும்பத்தைப் பற்றி வெளிப்படையாகப் பேசுகிறாள்..

''உங்க பொண்ணோடப் படிப்புக்கும், நீங்க செய்யப் போற சீருக்கும்.. நான் சொல்றேனேன்னு தப்பா நினைச்சுக்காதீங்கோ... எங்க மணி இவ்வளவுக்குத் தகுதி வாய்ந்த ஆளே இல்லே... அவனுக்கு ஸ்கூல் படிப்பு முடிச்சி, கோவில்லே வச்சு ஸிம்பிளா கல்யாணத்தை முடிக்கிற எடம் போறும்... மேலும்... அவனுக்கு இப்பவே முப்பத்தியேழு ஆறது.... உங்க பெண்ணுக்கும் அவனுக்கும் பதினொரு வயசு வித்தியாசம்.... குழந்தை அவ... நீங்க அவ ஜாதகத்தைக் கொடுத்துட்டு போங்கோ...'' எங்களுக்குத் தெரிஞ்சு நல்ல இடம் ஏதாவது வந்தா, நாங்க சொல்றோம். பொண்ணைப் பெத்தவாளோட சிரமம் எனக்குத் தெரியும்...''

அம்மா, நடுங்கும் கைகளால் மீனுவின் ஜாதகத்தை எடுத்துக் கொடுக்கிறாள்...

''நீங்க கவலையே படாதீங்கோ.... உங்க பொண்ணுக்கு சீக்கிரமா, நல்ல இடமாக் கிடைச்சுடும். எனக்கு என்னமோ தோணறது... உங்களுக்கும் எங்க மணிக்கு ஏத்த மாதிரி ஏதாவது ஜாதகம் கிடைச்சா சொல்லுங்கோ... மனுஷாளுக்கு மனுஷா

இந்த ஒத்தாசை கூட செய்யலைன்னா எப்படி... உன் பேரென்னம்மா...''

அவள், அருணாவின் தோளில் சிநேகிதமாய் கைபோட்டபடிக் கேட்கிறாள்:

''அருணா....''

''நல்ல பேரு. உங்க அக்காவுக்கு, கல்யாணம் நிச்சயமானா, என்னைக் கூப்பிடுவியோல்லியோ...''

அருணா, இதற்குப் பதில் சொல்லு முன், அம்மா பத்மஜாவின் இரு கைகளையும் சேர்த்துப் பிடிக்கிறாள்.

''கண்டிப்பா... முதல் பத்திரிக்கை உங்களுக்குத்தான்.. நானும், இவளுமே நேரே வந்துக் கொடுப்போம்.''

விடைபெற்று வெளியே வந்தவுடன் அம்மா கொளுத்தும் வெய்யிலில், கைகளால் கண்களை அணைகட்டிய படியே மகளைப் பார்த்துத் தெம்புடன் சிரிக்கிறாள்....

''என்னம்மா...''.

''இத்தனை அலைச்சல்லே மீனுவுக்கு வரன் கிடைக்கலையின்னாலும், ஒரு நல்ல மனுஷி கிடைச்சாடி... பாரு... இத்தனைப் பேருல இவ ஒருத்திக்குத்தான் பொண்ணைப் பெத்தவாளோட சிரமம் தெரிஞ்சிருக்கு.''

''என்ன பிரயோஜனம்மா... ஜாதகம் கிடைக்கலையே...''

''கிடைக்கும்... இன்னும் நாலு எடம் விசாரிச்சா நிச்சயம் கிடைக்கும்... நான் இப்ப ரொம்ப தெம்பா இருக்கேன் தெரியுமோ...? பாரேன், என்னமா மனசைத் தடவி கொடுக்கறாப்பலப் பேசினா...''

அம்மா, சொல்லிச் சொல்லி வியக்க அருணா சிரிக்கிறாள்.

''அவ செஞ்ச தொழில் அப்படிம்மா... நாலுபேர் கிட்ட நல்லத்தனமாப் பேசினாத்தான் சான்ஸ் கிடைக்கும். நடிகை இல்லையா...?''

இதைக் கேட்டதும் அம்மாவுக்கு எங்கிருந்தோ கோபம் பொங்குகிறது.

''அவ என்னவா இருந்தா என்ன.. அவ மனுஷிடீ...''

அம்மா சிறு பெண் போலக் குதித்துக் கொண்டு நடக்க, அருணா ஓட்டமும் நடையுமாய் தாயைப் பின் தொடருகிறாள்... ●

# கண்கள்...









## இவற்றினால் உணர்வுகளை வெளிப்படுத்துங்கள்

சிரிப்பு. மகிழ்ச்சி. சினம். சிருங்காரம். அத்தனையும் சிறப்பாக எடுத்தியம்ப முடியும்... சிங்கார் டீலக்ஸ் கண்மையுண்ட உங்கள் கண்களால். கருமைப் பளபளப்பு மிக்கது. சிங்கார்—அடடா! எத்தனை குளுமை... விசேடமான தயாரிப்பு சிங்கார் ...ஆகவே அத்தனை அழகு... கண்களுக்கு எரிச்சல் இல்லாதது.






# சிங்கார்

டீலக்ஸ் கண்மை

இது ஒன்றே கண்களுக்கு நலமான கண்மை.

everest/83/SH/179rtm

# ராசி பலன்

## —ஜனவரி '84—

### மேஷம்



வாழ்க்கையில் உங்களுக்காகப் பல புதிய வழிகள் திறக்கக் காத்திருக்கின்றன. ஆனால் இம்மாதத்தின் முதல் இரு வாரங்கள் வரை என்ன நடக்கின்றது என்றே புரியாத புதிராக இருக்கும். அரசாங்க மற்றும் தனியார் துறைகளில் பதவி உயர்வை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்களுக்குச் சாதகமான பலன்கள் கிடைக்கும். இரும்பு சம்பந்தப்பட்ட வியாபாரம் செய்பவர்களுக்குப் படிப்படியான உயர்வு கிடைக்கும்.

### ரிஷபம்



இம்மாதம் முழுவதுமே தெய்வ சிந்தனையாகவும், புனிதப் பயணங்களை மேற்கொள்ளுவதுமாகவே இருக்கும். தெய்வ சம்பந்தமாக நிறைய செலவினங்களும் உண்டாகும். கணவரின் உறவினர்களின் மூலமாக எதிர்பாராத தனலாபம் கிடைக்கும். குழந்தைகளின் மூலமாகப் பரிசுகளும், பாராட்டுப் பெருமைகளும் கிடைக்கும். பண வரவும், செலவும் ஒன்றுக்கொன்று சரிப்பட்டுப் போய்விடுவதால் வழக்கமான சிறு பூசல்களும் தவிர்த்துக் குடும்பத்தில் அமைதி நிலவும்.

### மிதுனம்



நீங்கள் நெருங்கிய பந்தம் என்று நினைத்துக் கொண்டிருந்த உறவினர் ஒருவராலேயே குடும்பத்தில் பெரும் சண்டை சச்சரவுகளும், குழப்பங்களும், மன அமைதியின்மையும் ஏற்படும். கூடியவரை எவரையும் நம்பாமல் சுயமாகச் செயல்பட்டு வாழ்க்கையில் முன்னேறுவது நல்லது. இம்மாதம் மூன்றாவது வாரம் வரை ஓரளவு கெடுபிடிகள் நிறைந்து காணப்பட்டாலும், மாதத்தின் கடைசி நாட்களில் புதிய மகிழ்ச்சிகளும், பண வரவும் ஏற்படும்.

### கடகம்



இவ்வருடத்தின் மறக்க முடியாத மாதமாக, மிகவும் மகிழ்ச்சியையும், குதூகலத்தையும் தரக்கூடிய மாதமாக வருடத்தின் முதல்மாதமான இம்மாதம் அமையும். உறவினர்களின் வருகையும், சுபநிகழ்ச்சிகளும் அதனால் குடும்பத்தில் கலகலப்பும் ஏற்படும். நீண்ட நாள் பிரிந்திருந்த குடும்பங்கள் ஒன்று சேரும். செலவினங்களுக்கு ஏற்ற பணவரவும் உண்டாகும். அலுவலகத்தில் குழப்பங்கள் குறைந்து சுமுகமான நிலைமை மலரும்.

### சிம்மம்



பொருளாதார ரீதியாக இதுநாள் வரை இருந்து வந்த சிரமங்கள் குறைந்து இம்மாதம் முதல் சம்பாத்தியத்திற்கான புதிய வழிகள் திறக்கும். குடும்பத்தில் நுழைந்த புதிய நபரின் காரணமாக உயர் அதிகாரிகளின் நட்பும், செல்வாக்கால் பயனடையும் தன்மையும் ஏற்படும். வெளியூர்ப் பிரயாணங்களினால் திட்டமிட்ட காரியங்கள் நினைத்தபடி நிறைவேறும். கலைத்துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்குப் பொது ஜனங்களிடையே புகழ் பரவும்.

### கன்னி



பொதுமக்களிடையே அதிகத் தொடர்புடைய வேலையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு இது ஒரு வரப்பிரசாதமான மாதமாகும். அரசாங்க அதிகாரிகளின் பார்வை எதிர்பாராதவிதமாக உங்கள்பால் திரும்பும். அதனால் பிரகாசமான எதிர்காலத்திற்குரிய வாய்ப்புகள் பரவுவதோடு,



சகஜமான பண வரவும் உண்டாகும். கிடைத்த வாய்ப்புகளைப் பயன்படுத்தி மேலும் மேலும் உயர வழிவகுத்துக் கொள்வீர்களானால் ஸ்திரமான எதிர்கால பலிதங்கள் கிடைக்கும்.

## துலாம்

நீண்ட காலத்திற்குரிய திட்டங்களைத் தீட்டி வைத்திருப்பவர்களுக்கும், நிரந்தரமான வருவாய்க்குரிய திட்டங்களைச் செயல்படுத்த நினைத்திருப்பவர்களுக்கும் இது நல்ல பலன்களைத் தரும் மாதமாகும். மேலதிகாரிகளின் ஒத்துழைப்பும், அரசாங்க ஆதரவும் எளிதாகக் கிடைக்கும். அந்தரங்க வாழ்க்கையில் இனிமையான முடிவுகளை எடுக்க இது சரியான மாதமல்ல. தீர்க்க ஆலோசனையுடன் சிறிதே ஒத்திப் போடுவதன் மூலம் சரியான முடிவைச் செயல்படுத்தலாம்.

## விருச்சிகம்



வழக்கமான இல்லற மற்றும் உத்தியோகக் கடமைகளைச் செய்துகொண்டிருக்கும் மாதமாக இது அமையும். பொழுது போக்கிற்கும், தேவையான நிரந்தரப் பொருட்களை வாங்குவதற்கும் உகந்த மாதமிது. சிறிய பிரயாணங்களை மேற்கொள்ள வேண்டி வரலாம். நெருங்கிய உறவினர் ஒருவரிடையே சிறிதே சுகவீனம் ஏற்பட்டு மனச்சஞ்சலத்தை உண்டாக்கலாம். பண வரவும் செலவும் ஒன்றாகவே அமையும். பொது மக்களிடையே வழக்கமான உறவு நிலைமையே நிலவும்.

## தனுசு



திருமணமாகாதவர்களுக்கு மனதுக்குப் பிடித்த உறவுகள் வந்து சேரும் மாதமிது. வேலை தேடிக் கொண்டிருப்பவர்களுக்கும் நற்செய்திகள் கிடைக்கும். கலைஞர்களுக்கும், விளையாட்டு வீரர்களுக்கும் எதிர்பார்த்த அளவு வெற்றிகளும், புகழும் கிடைக்கும். கணவன் – மனைவியிடையே அந்தரங்கமான பிணக்குகள் உண்டாவதற்கு வாய்ப்புகள் உண்டு. கூடியவரை விவாதங்களைத் தவிர்ப்பது நல்லது.

## மகரம்



இம்மாதம் தொடங்கி இன்னும் பல வாரங்களுக்கு சிறிய சிறிய ஆனால் நிரந்தரப் பாதுகாப்புத் தரக்கூடிய பலன்களாக உண்டாகும். எதிர்பாராத வகையில் வந்து சேர்ந்த நண்பர் ஒருவரின் உதவியால் பல புது முகங்களின் தொடர்பு ஏற்பட்டு, நீண்டகால வியாபார ஒப்பந்தங்கள் ஏற்படும். வியாபாரத்தைப் பொறுத்தவரையும் அனுகூலமான பல திட்டங்கள் ஏற்படுத்த யோசனைகள் பிறக்கும். தம்பதியரிடையே அன்பான உறவு நிலவும்.

## கும்பம்



குடும்பத்தில் நீங்கள் இட்டமிட்ட காரியங்களை நிறைவேற்றச் சாதகமான சூழ்நிலை பிறக்கும். அதை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டீர்களானால் நிரந்தர பலன்களும், உறவினர்களிடையே சுமுகமான உறவும் நிலவும். சிறிய இடமாற்றங்களும் ஏற்பட வாய்ப்புண்டு. கணவன் மனைவியிடையே அன்பான உறவும், புதிய நபரின் வருகையும் உண்டாகும். அலுவலகத்தில் எதிர்பாராத பணவரவு கிடைக்கவும் வாய்ப்புண்டு.

## மீனம்



அதிக அறிமுகம் இல்லாதவர்களை நம்பி மிகத் தீவிரமாகக் காரியத்தில் இறங்குவது ஆபத்தில் முடியலாம். இம்மாதத்தில் எந்த ஒரு தீர்மானத்தை எடுக்குமுன்பும் இரு ஆலோசிப்பதும், மிகவும் அந்தரங்கமான நண்பர்களின் அறிவுரையைக் கேட்பதும் சிறந்தது. பண விவகாரங்களில் மிகவும் கெடுபிடியுடன் இருந்தால் தான் ஓரளவு ஆதாயங்கள் அடைய வாய்ப்புண்டு. உஷ்ணம் சம்பந்தப்பட்ட சிறு உபாதைகள் ஏற்பட்டுச் சரியாகும் நிலை உண்டாகும்.

திருமதி ஸுலக்ஷ்ணா ராஜகோபாலன் எழுதிய சுவைமிக்க உணவுகள் (Vegetarian) வண்ணப்படங்களுடன் (சூப், ஸ்நாக்ஸ், டெஸர்ட்ஸ், ஐஸ்கிரீம்ஸ். புடிங் Etc.) ரூ. 20.00

வண்ணக் கேக்குகள் இனிய பிஸ்கட்டுகள் செய்முறை வண்ணப்படங்களுடன் ரூ. 20.00

திருமதி விசாலாட்சி எழுதிய நவீன அசைவ உணவு வகைகள் (Non Vegetarian) வண்ணப்படங்களுடன் ரூ. 20.00

பழரசம், ஜாம். ஊறுகாய்கள் செய்முறை ரூ. 3.60

நாம் அழகாய் இருக்க (அழகு குறிப்புகள்) ஆசிரியர் அருணா. கோபாலகிருஷ்ணன் ரூ. 20.00

---

தனிப்பிரதி வேண்டுவோர் புத்தக விலையுடன் ரூ. 2 - சேர்த்து M.O. செய்க. ஆர்டர்கள் V.P.P. அல்லது பேங்க் மூலம் அனுப்பப்படும்.

---

பிரபல நாவலாசிரியர்களான திருமதி லக்ஷ்மி, சிவசங்கரி, இந்துமதி. திரு. விக்கிரமன் கோவி. மணிசேகரன், கிருஷ்ணமணி ஆகியோர் எழுதிய நூல்களும் கிடைக்கும். விலைப்பட்டியலுக்கு எழுதவும்.





**திருமகள் நிலையம்**

55, வெங்கடநாராயணா ரோடு,
தி.நகர், சென்னை-600 017.
போன்: 443207

SOBHAGYA

---

# கர்ப்பிணிகளுக்கு இனிப்பு பண்டங்கள் ஏன்?

"கர்ப்பிணிகளுக்கு மசக்கை என்பது உண்டு. அப்பொழுது அவர்கள் மனதில் ஏற்படும் விருப்பங்களை நிறைவேற்றினால் பிறக்கும் குழந்தை பூரண வளர்ச்சியுடன் பிறக்கும். அவர்களுடைய ஆசைகள் நிறைவேறாவிடில் சிசுவின் வளர்ச்சி பாதிக்கப் படும். குறிப்பிட்ட ஆசை எந்த அளவுக்கு பூர்த்தி செய்யப்படவில்லையோ அந்த அளவுக்கு குழந்தைக்கு ஊனம் ஏற்படும்."

— "சரகர்"

கர்ப்பிணிகளின் அத்தகைய ஆசைகளில் இனிப்புகளும் ஒன்று. ஆதலின் எங்களுடைய ருசியான, தூய்மையான இனிப்புப் பண்டங்களை வாங்கி கர்ப்பிணிகளுக்கு கொடுங்கள்.

இனிப்புக்கள்: ரஸமலாய், பாதாம் அல்வா, போளி, கோதுமை அல்வா முதலியன

காரம்: கைமுறுக்கு, தட்டை, தேன்குழல், சமோசா, நவரத்ன மிக்ஸ்சர், ஸ்பெஷல் மிக்ஸ்சர்

திருமண வைபவங்களுக்கு பருப்புத் தேங்காய், சீர்முறுக்கு, அதிரசம், திரட்டிப்பால் ஆகியவற்றையும் தயாரித்து தருகிறோம்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை-600 020
போன்: 412557

காமதேனு கூட்டுறவு சூப்பர் மார்க்கெட், தேனாம்பேட்டை, சென்னை
150, பவுண்டன் பிளாசா, பேந்தியன் ரோடு, எக்மோர்

# செய்தி மலர்

ராஜகுரு





இந்திராகாந்திக்குப் புகழ் சேர்த்த காமன்வெல்த் மாநாடு டில்லியில் சுமார் 1500 கோடி ரூபாய் செலவில் விமரிசையாக நடந்தேறியது. விதம்விதமான உடைகளில் சுறுசுறுப்பாக வளைய வந்தார் நமது 67 வயதான பிரதமர். 'சோகம்' என்னும் இந்த மாநாடு பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் சூரியன் அஸ்தமிக்காத காலத்திலிருந்தே நடைபெற்று வருகிறது. 1926–ம் வருடமே காமன்வெல்த் அமைப்பு தோன்றிவிட்டது. அப்போது பிரிட்டிஷ் சாம்ராஜ்ய நாடுகள் 'வாழ்க வாழ்க ஜார்ஜ் மன்னர் வாழ்க வாழ்கவே' என்று சொல்லிக் கொண்டிருந்தன. இன்று அநேகமாக எல்லா காலனி நாடுகளும் (20–க்கு மேல்) சுதந்திரம் பெற்று விட்டன. இந்தியா, ஸ்ரீலங்கா போன்ற நாடுகள் குடியரசுகளாக பிரிட்டிஷ் ஆட்சித் தொடர்பை அறுத்துக் கொண்டு விட்ட போதும் பொருளாதாரம், கலாச்சாரம் மற்றும் வணிக உறவில் உள்ள விசேஷ அந்தஸ்துக்காக காமன்வெல்த் அமைப்பில் தொடர்ந்து உறுப்பினராக உள்ளனர். இதில் வேடிக்கை என்னவென்றால் மொத்தம் நூறு கோடி காமன்வெல்த் பிரஜைகளில் இந்தியர்கள் மட்டும் 70 கோடி. தொண்ணூறு சதவீதம். மற்ற நாடுகளில் ஜனத்தொகை ஒரு லட்சத்திற்கு மேல் இல்லை.

காமன்வெல்த் மாநாட்டுத் தீர்மானங்கள் எல்லாம் வழக்கம்போல ஒப்புக்குச்சப்பாணியாக இருக்கின்றன. சர்வதேச பொருளாதாரக் கொள்கை வேண்டும் என்று கோட்டிக் கொண்டிருப்பதுதான் உருப்படியான தீர்மானம். தற்போது பிரிட்டன் உட்பட தொழில் முன்னேற்றம் அடைந்த நாடுகள் இந்தியா போன்ற வளர்ந்து வரும் நாடுகளுக்குப் பொருளாதார உதவி மற்றும் வணிகத் தொடர்பு இவற்றில் அதிகம் அக்கறை காட்டுவதில்லை என்பது நீண்ட நாளைய குற்றச்சாட்டு.

இந்த மாநாட்டை ஒட்டி பிரிட்டிஷ் அரசி எலிஸபெத்தின் இந்திய விஜயம் நிகழ்ந்தது.

1953–ஆம் ஆண்டு பட்டம் சூட்டிக் கொண்ட எலிஸபெத் இளவரசி 22 ஆண்டுகளுக்கு முன்பு இந்தியா வந்திருந்தார். அப்போது குமரியாகத் தோற்றமளித்தவர் இப்போது ஓர் அழகான பாட்டியாக முதிர்ச்சி பெற்று விட்டார். பிரிட்டிஷ் அரசி தினசரி வேளைக்கு ஒரு உடையும், விதம்விதமான தொப்பிகளும் அணிபவர். ஒவ்வொன்றும் மேற்கித்திய உடை நாகரீகத்துக்கு முன்னோடியாக அமையும். இவற்றைத் தயாரிப்பதற்கென்றே தனி டிசைனர்கள் உண்டு.

நாடு முழுவதிலும் கணவர் பிலிப்ஸ் சுற்றிப் பார்த்து விட்டு இந்தியாவில் தொழில் முன்னேற்றத்தை வெகுவாகப் பாராட்டி விட்டுச் சென்றார். இந்தியா விஜயத்தின் போது பிரிட்டிஷ் அரசியின் திருமண வெள்ளி விழா நாள் வந்தது. ஹைதராபாத்தில் கணவருடன் இரவு விருந்து தவிர வேறு கொண்டாட்டங்கள் ஏதுமில்லை. மாதத்தில் ஒரு நாள் தான் கணவரும் மனைவியும் ஒரே மேஜையில் உட்கார்ந்து சாப்பிடும் சந்தர்ப்பம் கிடைக்கிறதாம்.

இந்திராகாந்தி, பிரிட்டிஷ் அரசி தவிர சென்ற மாதம் செய்திகளில் பிரதானமாக இடம் பெற்றவர் பிரதமரின் பிரதம ஆலோசகர் என்ற அந்தஸ்து பெற்றிருந்த திரேந்திர பிரும்மச்சாரியாகும்.

இவர் வயது 60–க்கு மேலிருக்கும். ஆனால் கருகருவென்று முடியும், தாடியும், கட்டு மஸ்தான உடம்பும், கணீரென்ற குரலும் இவரை என்றும் இளமையாகக் காட்டுகின்றன. இவரது இளமையின் ரகசியம் 'ஹட யோக'மாம். 30 ஆண்டுகளுக்கு மேலாக ஜவஹர்லால் நேரு காலத்திலிருந்து இவருக்கும் பிரதமர் இல்லத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. சஞ்சய்காந்தி இவரைத் தன் குருவாக மதித்து வந்தார்.

மோர் குழம்பு செய்யும்போது குழம்பை இறக்கி வைப்பதற்குமுன் இரண்டு ஸ்பூன் தேங்காய் எண்ணெயை ஊற்றியபின் சிறிது நேரங்கழித்து இறக்கிவைத்தால் குழம்பு மணமாகவும் ருசியாகவும் இருக்கும்.

கே. சுஜாதா

சமீபத்தில் அயல் நாட்டிலிருந்து லைசென்ஸ் இல்லாமல் ஏராளமான துப்பாக்கிகளைத் தருவித்து கடத்தல் வியாபாரம் செய்ததாக காஷ்மீர் போலீஸ் குற்றம் சாட்டி இவரைக் கோர்ட்டுக்கு இழுத்திருக்கிறது. இந்தத் துப்பாக்கிகள் சில பஞ்சாபில் சீக்கிய தீவிரவாதிகளுக்கு விற்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. தவிர பாக்டரிக்கான லைசென்ஸில் போர்ஜரி செய்திருப்பதாகவும் பிரும்மச்சாரி மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது.

ஆச்சரியம் என்னவென்றால் இவரை இதுகாறும் ஆதரித்து வந்த பிரதமர் இந்திராகாந்தி இப்போது கண்டும் காணாதது போல் இருப்பதுதான். சமீபத்தில் ஐந்தாண்டுகளாக (இடைபட்ட ஜனதா ஆட்சிக் காலம் தவிர) தொடர்ந்துதொலைக் காட்சியில் வாரம் இருமுறை ஒளிபரப்பாகி வந்த 'யோகாப்யாஸ்' நிகழ்ச்சி திடீரென்று நிறுத்தப்பட்டு விட்டது. பிரதமரின் வீட்டுக்கு தடையில்லாமல் சென்று வந்தவருக்கு இப்போது அனுமதி மறுக்கப்படுகிறதாம். டெலிபோனில் கூட இவரால் பிரதமருடன் பேச முடிவதில்லையாம். இதற்கெல்லாம் காரணம் இவர் மீது ராஜீவ்காந்திக்கு ஏற்பட்டுள்ள கோபம் தான் என்று சொல்லப்படுகிறது. பிரதமரிடம் உள்ள செல்வாக்கை இவர் நீண்டகாலமாக துஷ்பிரயோகம் செய்து வந்ததுதான் ராஜீவின் கோபத்துக்கு காரணமாம்.

## மாருதி கார்

இந்திராகாந்தி சாதாரணமாக உணர்ச்சி வசப்படுவதில்லை. மகன் சஞ்சய் விமான விபத்தில் இறந்த போது ஒரே ஒரு முறை தான் வெளிப்படையாகக் கண்ணீர் உகுத்தார். டிசம்பர் 14–ந் தேதி 'சஞ்சயின் கனவு' பலித்து மாருதி கார் உற்பத்தியைத் துவக்கிய வைபவத்தில் மகன் சஞ்சய்க்கு ஏற்பட்ட இன்னல்களையும் சுமத்தப்பட்ட அவதூறுகளையும் குறிப்பிட்டுப் பேசும்போது கண்களில் நீர் பொங்கிக் குரல் தழுதழுத்துப் போனார்.

சஞ்சய் இருந்தபோது 'சுத்த சுதேசி'யாக இந்தக் குட்டிக்கார் உற்பத்தியில் இறங்கினார். முடியவில்லை. ஜெர்மானிய மோட்டாரைப் பூட்டி நாலைந்து காரை ஓட்டிக் காட்டினார். அதோடு சரி. பாக்டரியில் ஏகப்பட்ட நஷ்டம் ஏற்பட்டுக் கடைசியில் இழுத்து மூட வேண்டியதாகி விட்டது.

இரண்டாண்டுகளுக்கு முன்பாய் மாருதி தொழிற்சாலையை தேசிய மயமாக்கி ஏராளமான முதலீடு செய்து ஜப்பானிய 'ஸுஸுகி' கார் தயாரிப்பாளர் புலியுடன் மீண்டும் மாருதி கார் உற்பத்தி துவக்கப்பட்டது. இப்போது அழகிய சிறிய அயல்நாட்டு மோஸ்தர் கார் தயாராகி விட்டது. விலை உள்ளூர் வரி நீங்கலாக ரூ. 47,500 தான். (பிரீமியர், அம்பாஸடர் கார்கள் ரூ. 80,000–க்கும் மேல்) மாருதி டீலக்ஸ் மாடல் ஒன்றும் ரூ. 75,000 விலையில் தயாராகப் போகிறதாம். இந்த சொகுசுக் காரில் குளுகுளு வசதி ஸ்டீரியோ எல்லாம் இருக்குமாம். ஜப்பானிய சம்பந்தத்தை ஆரம்பத்திலேயே அனுமதித்திருந்தால் மகன் சஞ்சயின் கனவு அன்றைக்கே நனவாகியிருக்குமே!

## ஒரு சினிமா செய்தி

மேற்கு ஜெர்மனியில் மான்ஹைம் என்ற இடத்தில் சென்ற மாதம் நிகழ்ந்த 'மூன்றாவது உலகத் திரைப்பட விழாவில் பணியம்மா என்ற கன்னடப் படம் மூன்று முதல் பரிசுகளைப் பெற்றது. தவிர, தங்கப் பதக்கமும் பெற்றது. குழந்தையிலேயே திருமணமாகி விதவையாகிவிட்ட ஒரு பெண்ணின் வாழ்க்கைக் கதை இது. இதைப் படமாக்கி தேசிய விருது பெற்று இப்போது சர்வதேச விருதும் பெற்றிருப்பவர் இயக்குனர் பிரேமாகரந்த்

# Only Jain




## ஜெயின்
## வீட்டுப்பாத்திரங்களுக்கு
## ஒரு கலைக்கோவில்

**இறக்குமதி செய்யப்பட்ட காந்தச்சக்தியில் கவரப்படாத**
**18/8 ஸ்டெயின்லஸ் ஸ்டீல் தகடால் செய்யப்பட்டவை**


டேபிள் டிஷ்


இட்டிலி குக்கர்


டீ அர்ன்


டிபன் காரியர்


சைஞ் பிளேட


குக்கர் பாத்திரம்


கல்யாணி டப்பா


டீ கெட்டில்


குடம்



தாமிர அடிப் பாகமுள்ள டோப்


வாணலி


சைஞ் பவுல்


சாப்பாட்டுத் தட்டு

பல வகைகளில், எல்லா பிரபல ஸ்டெயின்லஸ் ஸ்டீல் ஷோரூம்களில் கிடைக்கும்.

## ஜெயின் ஸ்டெயின்லெஸ்

46, ரகுநாயகுலு தெரு, பார்க்டவுன்,
சென்னை-600 003. போன் : 31545

15 வருடங்களாக கீர்த்திக்கை
பெற்ற பெயர்

CHARI



**வ**ருஷம் 1933.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் அந்த நாளில் போக்குவரத்து அதிகம் கிடையாது.

சாலை பெரும்பாலான நேரத்தில் சூன்யமாக இருக்கும். அபூர்வமாக ஒரு வாகனம் போனால் உண்டு.

சில தடங்களில் பிரசித்தி பெற்ற கொள்ளைக்காரர்கள் இருந்தார்கள்.

அதுவும் திருநெல்வேலி ஜில்லாவின் மலைப்பாங்கான தடங்களில் கொள்ளைகளும் வழிப்பறிகளும் அதிகம்.

இவ்வளவு பயங்கரச் சூழ்நிலையில் நெல்லையிலிருந்து திருக்குறுங்குடி போகும் சாலையில் இரண்டே இரண்டு பெண்கள் தனியாக ஒரு காரில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள்.

மணி இரவு ஒன்பது! எங்கும் மையிருட்டு மின்சாரமும் கிடையாது. விளக்கும் கிடையாது. சாலையும் கச்சா சாலை! கார் குதித்து ஓடியது.

டிரைவர் திருட்டு முழி முழித்தான்.

## வழிகாட்டும் பெண்மணிகள்-3




அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் பார்த்தான். மலைப்பிரதேசம் தொடங்கியிருந்தது. அவனிடம் ஒரு சதித் திட்டம் இருந்தது. ஒரு குறிப்பிட்ட வளைவில் அந்தப் பெண்களை காரோடு பள்ளத்தில் தள்ளிக் கொன்று விட வேண்டும்.

ஒரு பெரிய பிரமுகரிடமிருந்து அப்படி உத்தரவு. அவர் கையாள் அந்த டிரைவர்! வழக்கமாக அந்தக் காரை ஓட்டிய டிரைவர் வேறு ஒரு நபர்! ஆனால் அன்றைய தினம் பிரமுகரின் உத்தரவின் பேரில் அவன் கடத்தப்பட்டிருந்தான். அந்த விஷயம் அந்தப் பெண்களுக்குத் தெரியாது. அவனுக்குப் பதிலாக வேறு ஒரு டிரைவரை அவர்கள் அமர்த்தி இருந்தார்கள். அவன் பிரமுகரின் கையாள்! அவன் தான் இப்போது ஓட்டிக் கொண்டு வந்தது.

திருநெல்வேலி ஜில்லாவில் அப்போது ஜில்லா போர்ட் தேர்தல் நடந்து கொண்டிருந்தது. காங்கிரஸுக்குப் பிரசாரம் செய்வதற்காக அந்தப் பெண்கள் இருவரும் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள். காங்கிரஸை அப்போது வெறும் கட்சி என்று சொல்ல முடியாது. தேச விடுதலைக்காக இயங்கிக் கொண்டிருக்கும் மாபெரும் இயக்கம். இந்த இயக்கத்திற்காக ஆண்களும், பெண்களும் தங்கள் சொந்த வாழ்க்கையை விட்டுவிட்டு தியாக வாழ்க்கையை மேற்கொண்டிருந்தார்கள்.

அந்த இரு பெண்களும் அப்படித்தான் தேசியத்தைப் பற்றி இருந்தார்கள்.

கார் மலைச்சாரலில் போய்க் கொண்டிருந்தது.

போகப் போக டிரைவருக்கு மனத்தில் சலனம் ஏற்பட்டது. காரில் சவாரி செய்த இரு பெண்களும் பாடிக் கொண்டே வந்தார்கள். உள்ளம் உருக்கும் பாடல்கள்! இருவருக்கும் அருமையான குரல்! தேவகானம் போல இருந்தது கேட்பதற்கு! டிரைவருக்கு ஓட்டுவதே தொந்திரவே தெரியவில்லை. ஆனந்தமாக மிதப்பது போல் இருந்தது.

இருவரும் தேசியப் பாடல்களை உணர்ச்சிகரமாகப் பாடினார்கள். நாட்டின் விடுதலைக்காக எல்லோரையும் தியாகம் செய்ய அழைக்கும் பாடல்கள்!

டிரைவர் கேட்டுக் கொண்டே வந்தான். மனம் இளகிக் கொண்டிருந்தது. கண்ணில் நீர் தளும்பி விட்டது.

மலையில் மெள்ள ஏறும்போது மனத்தில் பெரிய போராட்டம்! எஜமானன் உத்தரவை நிறைவேற்றி காரைப் பள்ளத்தில் இறக்கி இந்தப் பெண்களைக் கொல்லவா? அல்லது அதை நிறைவேற்றாமல் எஜமானனது கோபத்திற்கு ஆளாவதா?

கோபத்துக்கு ஆளானால் என்ன ஆகும் என்று தெரியும். பிரமுகர் அந்த டிரைவரைத் தீர்த்துக் கட்டிவிடுவார்!

போராட்டம் அதிகரித்துக் கொண்டே வந்தது.

மலையில் குறிப்பிட்ட வளைவு நெருங்கி விட்டது.

டிரைவர் வண்டியைச் சாலை ஓரத்துக்குக் கொண்டு வந்தார்.

சட்டென்று நிறுத்தினான்.

இரு பெண்களும் திடுக்கிட்டு பாட்டை நிறுத்தினார்கள். வெளியே பயங்கர இருட்டு! நிற்கும் இடமோ அத்துவானம்!

டிரைவர் கீழே இறங்கினான்! மனத்தில் போராட்டம்!

ஆனால் அவனது நல்லதனம் தான் மெள்ள மெள்ள வென்று கொண்டிருந்தது.

''என்ன டிரைவர்?'' என்று இருவரும் கேட்டார்கள்.

''ரிப்பேர்! என்றான் டிரைவர் அமுத்த லாக!

''ஐயையோ! என்ன செய்ய?' என்றாள் ஒரு பெண்:

''பயப்படாதே! பாடிட்டு இருப்போம்! பின்னாடி எப்படியும் தொண்டருங்க வரு வாங்க!'' என்றாள் மற்றொரு பெண்.

இருவரும் இருட்டைப் பற்றியோ தனி மையைப் பற்றியோ பயப்படவில்லை. பாட ஆரம்பித்தார்கள்.

டிரைவர் அப்படியே நின்றான்.







சிறிதுநேரத்தில் ஒரு கார் வரும் சப்தம்! தொடர்ந்து ஒரு காரின் முன் விளக்குகள் தெரிந்தன.

தொண்டர்களுடன் ஒரு கார் வந்தது. அவர்கள் அருகில் வந்து நின்றது. ''கார் ரிப்பேர்'' என்றார்கள் பெண்மணிகள்.

தொண்டர்கள் அவர்களைக் காரில் ஏற்றி. கூரை, டிக்கி மீதெல்லாம் அவர்கள் உட் கார்ந்து கொண்டு குறுங்குடியை நோக்கிச் சென்றார்கள்.

இரவு பத்து மணிக்குப் பொது கூட்டத் தில் காங்கிரஸ் பிரசாரம் செய்தார்கள்.

டிரைவர் காரை விட்டுவிட்டு தலைமறை வாகி விட்டான். பிரமுகரிடம் திரும்பிப் போகவில்லை. பத்து நாட்கள் மறைந்திருந்து பின்னர் அந்தப் பெண்கள் இருக்கும் இடத்தைத் தேடி அடைந்தான். அவர்களைக் கைகூப்பி வணங்கி; அன்று நடந்ததையும், நடக்கவிருந்ததையும் கூறி மன்னிப்புக் கேட்டுக் கொண்டான்.

இரு பெண்களில் ஒருத்தி பிரசித்திபெற்ற நாவலாசிரியை திருமதி வை. மு. கோதை நாயகி. மற்றவர் ருக்மணி லட்சுமிபதி!

1933—இல் குடும்பங்களில் பெண்களுக் கான கட்டுப்பாட்டை அறிந்திருக்கலாம். வெளியே வரக் கூடாது. யாரிடமும் பேசக் கூடாது. வீட்டுக்குள்ளேயே அடைந்திருக்க வேண்டும். பள்ளிக்கூடத்துக்கு அவர்கள் அனுப்பப்படமாட்டார்கள்.

இந்த ரீதியில் பிராம்மண குடும்பத்தில் பிறந்த கோதைநாயகி வெளியே வந்து தைரியமாக தேர்தல் பிரசாரத்திற்குக்கூடப் போயிருந்தார் என்றால் அது ஒரு மாபெரும் அதிசயம் என்று சொல்ல வேண்டும்.

இந்த அதிசயம் கோதைநாயகி வாழ்க் கையில் அபூர்வம் அல்ல! பல அதிசயங்கள் சகஜமாகவே நிகழ்ந்திருக்கின்றன.

தமிழில் பிரசித்தி பெற்ற 115 நாவல்கள் புகழ்பெற்ற வை. மு. கோ. வுக்கு தமிழ் படிக்கவும் எழுதவும் தெரியாது என்றால் யாராவது நம்புவார்களா?

1901—ல் பிறந்தவர் அவர்.

அவரது தந்தையும், அவரது வருங்கால மாமனாரும் நண்பர்கள்.

கோதைநாயகி பிறப்பதற்கு முன்பே வருங்கால மாமனார் வை. மு. ஸ்ரீநிவாச அய்யங்கார், வை. மு. கோ.வின் தந்தை வெங்கடாச்சாரியைப் பார்த்து, ''பெண் குழந்தைதான் பிறக்கும். கோதை என்று பெயர் வை. அவளை நான் மருமகளாக ஏற்றுக் கொள்கிறேன்'' என்றார்.

வை. மு. கோ. கருவில் இருக்கும்போதே அவர் திருமணம் நிச்சயமாகி விட்டது.

சொன்னபடியே தமது பையன் பார்த்த சாரதிக்கே கோதையை மணம் முடித்தார் வை. மு. ஸ்ரீநிவாசன்.

திருமணம் நடந்த ஆண்டு 1907. கோதைக்கு வயது ஐந்து! அவர் கணவன் பார்த்தசாரதிக்கு வயது ஒன்பது.

ஒரே ஒரு ஆண்டு மட்டும் கோதை ஆரம்பப் பள்ளியில் தெலுங்கு படித்தாள். பிறகு படிப்பு நின்று விட்டது.

மாமனார் வீட்டில் அவர்களுக்கு மற்றொரு குழந்தைபோல் கோதை வளர்ந்து வந்தாள்.

கோதைக்கு அபாரமாக கேள்வி ஞானம். குறிப்பாக பாட்டில் அவளுக்கு பெரும் ஈடு பாடு. வீட்டில் அக்காளுக்கு பாட்டு வகுப்பு நடக்கும் போது அதை உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருப்பாள். பிறகு தனிமை யில் பாடிப் பழகுவாள்.

மாமனார் மாமியாரும் அவளது பாட்டை ஊக்குவித்தார்கள்.

ஒருநாள் பாலக்காடு அனந்தராம பாகவத ரின் பாட்டு ஒன்றை வீட்டுக்குள் இனிமை யாகப் பாடிக் கொண்டிருந்தாள்.



Cartoon

தெருவாசலில் ஏதோ காரியமாகப் போய்க் கொண்டிருந்த அதே அனந்தராம பாகவதர் மெய்ம்மறந்து நின்று விட்டார்.

ஆர்வத்தோடு உள்ளே போய் சிறுமி கோதையைப் பார்த்து அதிசயப்பட்டு ''நல்ல சாரீரம்! பாட்டு நன்றாக வருகிறது. இப்போதே மேடையில் ஏறலாம். நல்ல பாடகி ஆவாள்'' என்று ஆசீர்வாதம் செய்தார்.

ஆக, எட்டு வயதில் பார்த்தசாரதி சபாவில் (1910) மேடை ஏறி கச்சேரி செய்தாள் சிறுமி கோதைநாயகி.

தொடர்ந்து பாட்டில் கவனம் கூடி வந்தது. சகோதரி சுப்புலட்சுமி ஒரு முறை கோதையின் பாட்டைக் கேட்க நேர்ந்தது. பரவசமாகி விட்டார். முத்துலட்சுமி ரெட்டியும் கோதையின் பாட்டில் பிரேமை கொண்டு விட்டார்.

இந்த இருவரது நட்புதான் தேசியத்தில் அவரைத் திருப்பியது.

1916—ல் தேசபக்தர் திலகர் சிறைமீண்டு சென்னை வந்தபோது திருவல்லிக்கேணியில் உற்சவ பங்களாவில் வரவேற்பு கொடுக்கப்பட்டது. அப்போது ஆரத்தி எடுப்பதற்கு பாட்டுப் பாடும் பொறுப்பு வை. மு. கோவிடம் கொடுக்கப்பட்டது. அழகாகப் பாடி, தேசிய வாழ்க்கையின் முதல் படியில் காலை வைத்தார்வை.மு.கோ.

கணவர் பார்த்தசாரதி வை. மு. கோ. வின் சங்கீத ஆர்வத்தைப் புரிந்து கொண்டார்.

கச்சேரிகளுக்கும் நாடகங்களுக்கும் அவரை அழைத்துப் போக ஆரம்பித்தார்.

அவர் ஆசீர்வதித்தபடி கீர்த்தி வரத்தான் செய்தது. ஆனால் கோதைநாயகி சுயபயிற்சி பெற்ற பாட்டுத் துறையில்அல்ல.

அவர் பழக்கப்படாத எழுத்துத்துறையில்!

கோதைக்கு உள்ளூற கற்பனை புலமை இருந்தது. வீட்டுக்குள் சிறுமிகளை வைத்து நாடகம் நடத்துவார். அதற்கான பாடல்களை அவரே கற்பனை செய்து சொல்லிக் கொடுப்பார். (அந்நாளில் இந்த வீட்டு நாடகத்தில் வசுந்தராவும் நடித்தார். பின்னர் அவர் பிரசித்தி பெற்ற சினிமா நட்சத்திரம்) ஆனார். நாடகங்கள் எல்லாம் புராணச் சம்பவத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கும்.

பொதுவான விஷயத்தில் நாடகம் போட்டால் என்ன என்று வை. மு. கோ. வுக்குத் தோன்றியது. இந்திர மோகனா என்ற தலைப்பில் உருவாகியது.

இந்த சமயத்தில் தான் அவர்கள் வீட்டுப் போர்ஷனில் பட்டம்மா என்பவர் கணவரோடு குடியிருந்தார். பட்டம்மாள் அந்த நாளில் எஸ். எஸ். எல். ஸி. தேறியவர். அவர் கோதையைப் பார்த்து, ''உங்களுக்கு கற்பனை வருகிறது என்கிறீர்களே! உங்களால் அதைத் தமிழிலே எழுத முடியவில்லை. நீங்கள் வாயால் சொல்லுங்கள்! நான் எழுதுகிறேன்!'' என்று கூறினார்.

அவ்வளவுதான்! இன்றைக்கு நாமறிந்த கோதைநாயகி உருவாகத் தொடங்கினார்.

(மீதி அடுத்த இதழில்)



சுமார் நான்கு வருடங்களாக இந்தியா முழுவதும் நடன நிகழ்ச்சிகளை நடத்திவரும் குமாரி சரஸ்வதி ராமமூர்த்தி பம்பாய் போதார் கல்லூரியில் படிக்கும் போது அனைத்துக் கல்லூரிகளுக்கிடையே நடைபெற்ற இளைஞர் விழாவில் சிறந்த கலைஞருக்கான தங்கப் பதக்கத்தை வென்றவர். உடல் ஊனமுற்றவர்களுக்காக இவர் பம்பாயில் நடன நிகழ்ச்சிகளை நடத்தி அதன் வருவை அவர்களுக்கு அளிக்கிருக்கிறார்.

—இல்யா

# திருமண மலர்



ஆரிய வைஸ்ய (கோமுட்டி செட்டியார்) வகுப்பைச் சேர்ந்தவர். நல்ல அழகான 25 வயது வாலிபர். எம். ஏ. படித்தவர். உயரம் 5' 6'' சுமார் பத்து லட்சத்துக்குச் சொத்தும் மாதம் ரூ. நான்கு ஆயிரத்துக்கு மேல் நிரந்தர வருமானமுள்ள பெற்றோர்களுக்கு ஒரே மகன். சொந்த வியாபாரம் செய்கிறார். நட்சத்திரம் மூலம் 3–ம்பாதம் இவருக்கு அதே வகுப்பைச் சேர்ந்த நல்ல குணமும், சிகப்பும், அழகும் உள்ள பெண் தேவை. உயரம் 5.2–க்கு மேலும் படித்த பெண்ணாகவும் இருப்பது நலம். பெண்ணின் ஜாதகம் மற்றும் போட்டோ இதர விபரங்களுடன் எழுதவும். பெட்டி எண்: 1096.

Alliance for lady Assistant Professor at Coimbatore, 33 5' 4'', Rs. 1600/- Tamil Iyer, Brahacharanam, Bharadwajam, Fair, Good looking, excellent housekeeper. expecting U. S. green card. Box No: 1097.

''கேரள நாயர் வகுப்பைச் சார்ந்த எஸ். எஸ். எல். சி. வயது 26. சிகப்பு நிறம் –உத்திரம் நட்சத்திரம். அழகும் குணமுமுள்ள குடும்பப் பாங்கான பெண்ணிற்கு படித்து வேலையிலுள்ள – வரதட்சிணை விரும்பாத பரந்த மனப்பான்மையுள்ள ''மணமகன் தேவை'' எளிய முறையில் திருமணம் செய்யலாம். சாதி தடையில்லை. குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1098.

''திருச்சிக்கு அருகில் எல்லா வசதிகளுமுள்ள கிராமத்தில் 50 ஏக்கர் நிலபுலன்களை நிர்வகிக்கும் நல்ல தோற்றமும் பழக்கவழக்கங்களுமுள்ள வசதியான 31 வயது. வடமாள், விஸ்வாமித்திர கோத்திர பட்டதாரிக்கு (மூல நக்ஷத்திரம்) வசதியான குடும்பத்திலிருந்து 25 வயதிற்குள், 5' உயரத்திற்குக் குறைவான நல்ல நிறமும் அழகுமுள்ள குடும்பப்பாங்கான பெண் தேவை. போட்டோ, ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1099.

ஹரித கோத்திரம் வடமாள் ஆயில்ய நட்சத்திரம். கடைசி பாதம். உள்ள வேலையில் இல்லாத 22 வயது அழகான பெண்ணுக்குப் பொருத்தமான பையன் தேவை. வயது 30–க்குள் இருந்தால் தேவலே. தனியார் கம்பெனி, பாங்கு, மற்றும் அரசாங்க வேலையில் இருப்பவர்களாக இருந்தால் தேவலே. பரந்த மனப்பான்மையுடைய அதிக வரதட்சிணை கேட்காத பெற்றோர்கள் எதிர்பார்க்கப்படுகிறது. பெட்டி எண்: 1100

Suitable match, for Tamil speaking 37 year Iyer girl divorcee, Marriage not consummated, Delhi employed. Box No: 1101.

தனியார் நடத்தும் மேல்நிலைப்பள்ளியில் ஆசிரியையாகப் பணிபுரியும், விவாகரத்து செய்த 37 வயது சைவப் பெண்ணுக்கு மணமகன் தேவை. தாரம் இழந்தவர், டைவர்ஸ் செய்தவர் விண்ணப்பிக்கலாம். எம்மதமும் சம்மதம். பெட்டி எண்: 1102.

இந்து விஸ்வகர்மா (தமிழ்) வகுப்பைச் சேர்ந்த வயது 30, உயரம் 5' 6'' எடை 90 கிலோ. பி. யு. சி. வரை படித்துச் சொந்தமாக இன்ஜினியரிங் ஒர்க்ஸ் வைத்து நடத்தும் பூரட்டாதி செவ்வாய் தோஷமுள்ள வரனுக்கு. 25 வயதிற்குள்ளான. பொருத்தமான மணமகள் தேவை. ஜாதகம் போட்டோவுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1103.

பி. ஏ. பி. டி. படித்து ஆசிரியையாகப் பணிபுரியும் 42 வயதான மாத்வ பிராமண வகுப்பைச் சேர்ந்த பெண்ணிற்குக் கருத்த மணமகன் தேவை. பிராமணர்களில் எந்த உட்பிரிவும் சம்மதம். பெண்ணிற்கு ஜாதகம் கிடையாது. பெட்டி எண்: 1104.

அரசுடைமையாக்கப்பட்ட வங்கியில் பணிபுரியும் சைவ வேளாள வகுப்பைச் சேர்ந்த மணமகனுக்கு, வயது 27, பி. எஸ். ஸி., பி. எட்., CAIIB வங்கியிலோ, அல்லது தபால் தந்தித் துறையிலோ பணிபுரியும் அதே வகுப்பைச் சேர்ந்த பெண் தேவை. பெட்டி எண்: 1105.

இந்து வெள்ளாள முதலியார் வகுப்பு. எஸ். எஸ். எல். ஸி. டைப்ரைட்டிங்–ஆங்கிலம், தமிழ். தையல் தெரியும். குடும்பப்பாங்கான குணநலம் மிக்க 19 வயது பெண்ணுக்கு நற்குணம் வாய்ந்த, போதிய வருவாயுள்ள நிரந்தர வேலையில் இருக்கும் மணமகன் தேவை. சாதி ஒரு பொருட்டல்ல. விவரங்களுடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 1106.

உயர் மத்தியதர பிராமண குடும்பம். மேல்படிப்பு. தற்சமயம் மத்திய அரசு பணி. 26 வயது. பின்னணிகளுடையவருக்கு சமூக பிரக்ஞை நிறைந்த, சுக – சௌகரியங்களுக்கு விசேஷமாக ஏங்காத, வாழ்க்கையை ஸீரியஸாக எடுத்துக் கொள்கிற, படித்த, வேலையிலிருக்கும் வாழ்க்கைத்துணை தேவை. பெண்கள் நேரடியாகவோ பெற்

ரூ. கள் மூலமாகவோ எழுதலாம். பெயர்கள் ரகசியமாக வைத்துக் கொள்ளப்படும். பெட்டி எண்: 1107.

லோஹித கோத்திரம், பிரகசரணம் 36 வயது, விவாகரத்துப் பெற்றவர் —வேறு பந்தமில்லை. இன்சூரன்ஸ் ஏஜண்ட் — மாத வருமானம் சுமார் 1000]- சொத்துள்ளவர். வரதட்சிணை இல்லை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 1108

வன்னிய குல க்ஷத்திரியர், வயது 33, டிப்ளமோ, அரசு உத்தியோகம் ரூ. 800]- மனைவியை இழந்த குழந்தைகள் இல்லாத இந்த வரனுக்கு, இதே வகுப்பைச் சார்ந்த நல்ல மணமகள் தேவை. ஜாதகம் அல்லது பிறந்த தேதி, பெயர் நட்சத்திரக் குறிப்புடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1109

31 வயதான எஸ். எஸ். எல். சி வரை படித்துள்ள நல்ல அழகான அய்யங்கார் (தென்கலை) பெண்ணுக்கு அய்யங்கார் வரன் தேவை. நல்ல வேலையும் நல்ல குடும்பமாகவும் இருந்தால் இரண்டாம் தாரமும் சம்மதம். பெட்டி எண்: 1110.

Parents of Bombay employed Executive Palghat Kowsika Braha-charanam Hastam 33 years, 180c.ms. invite alliance proposals from home loving tall slim girls Music/Fine arts talented. Reply with Horoscope. Box No: 1111.

29 வயது சென்னை. நல்ல எதிர்காலமுள்ள எம். டி. கௌண்டின்ய கோத்திரம் சிவப்பான ஐயங்கார் பையனுக்கு குடும்பப் பாங்கான வயது 160 செ. மீ. உயரமுடைய பட்டதாரி தென்]வடகலைப் பெண் தேவை. நடுத்தர]உயர் நடுத்தர குடும்பங்களிலிருந்து விபரங்களுடனும் ஜாதகத்துடனும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1112.

சோனிய வேளாளர் பிள்ளை வாரண்ட் ஆபீசராகப் பணிபுரியும் மாதம் ரூ. 1100 சம்பளம் வாங்கும் சொந்தத்தில் வீடு உள்ள 29 வயது கிருத்திகை நட்சத்திரம் பையனுக்கு மத்திய மாநில அரசில் பணிபுரியும் அதே பிரிவைச் சேர்ந்த பெண் தேவை. அல்லது உட்பிரிவுகள் இருந்தாலும் பாதகமில்லை. பெட்டி எண்: 1113.

''காஸ்யப வடமாள் கேட்டை நட்சத்திரம் பாதம்—2 ஸ்மார்த்தாள் வட ஆற்காடு மாநிறம்; உயரம் 157 சம்பளம் ரூ. 350. மணமகளுக்கு உத்தியோகத்தில் உள்ள வடமாள்]பிரஹசரணம் 38]42 மணமகன் தேவை. ஜாதகம் அவசியம் இல்லை. பெட்டி எண்: 1114.

கேட்டை நட்சத்திரம். விஸ்வாமித்ர கோத்ரம் தமிழ் ஐயங்கார். 27 வயது. பி. எஸ்ஸி பி. ஈ. எலக்ட்ரானிக் படித்து பெங்களூரில் சொந்தமாகத் தொழில் நடத்தும் நல்ல வருமானமுள்ள வரனுக்கு அதே இனத்தில் (உட்பிரிவு பாதகமில்லை.) நல்ல அழகும் குணமும் உள்ள பட்டதாரி மணமகள் தேவை. போட்டோவுடன் ஜாதக நகலும் அனுப்பவும். பெட்டி எண்: 1115.

சென்னையில் சொந்த வீடு. சொந்த வியாபாரம். ஸ்திரமான வருஷ வருமானம் ரூ. 30,000]- உள்ள தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த, வடகலை ஐயங்காருக்கு சுமார் 38 முதல் 40 வயது வரை உள்ள அதே இனத்தைச் சேர்ந்த படித்த லக்ஷணமுள்ள பெண் தேவை. மேற்படியாருக்குக் கால் சற்று சாய்ந்த நடை. ஏழையானாலும் பரவாயில்லை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1116.

**திருமண மலர்ப்பகுதியில் விளம்பரம் செய்ய கட்டணம் ரூ. 30/— தொகையை 'மங்கையர் மலர்' என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பவேண்டும். ஒரு விளம்பரத்தில் ஒருவருக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தர வேண்டும். பதில் அனுப்புபவர்கள் "விளம்பரதாரர், பெட்டி எண்.... c/o மங்கையர் மலர், கிண்டி, சென்னை-600032 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். தனிப்பட்ட கடிதப் போக்குவரத்து கிடையாது.**

ஸ்ரீவத்ஸ கோத்திரம் மிருகசீர்ஷம் நட்சத்திரம். வயது 27 — வசதியான குடும்பத்தைச் சேர்ந்த — பிறவியிலேயே பார்வையில் சிறிது கோளாறு உடைய பெண்ணிற்குப் பரந்த மனப்பான்மையுடைய அன்பு உள்ளமும் கொண்ட மணமகன் தேவை. வீட்டு வேலைகளைத் திறம்படச் செய்ய முடியும். பெட்டி எண்: 1117.

''காஸ்யப கோத்திரம். வடமாள் தமிழ் ஸ்மார்த்தாள் உயரம் 157. உத்திரம் 4. சென்னையில் தனியார் துறை சம்பளம் 300. அழகிய 31 வயது மணமகளுக்கு வடமாள் அல்லது பிரஹசரணம் உத்தி

யோகத்தில் உள்ள மணமகன் தேவை பெட்டி எண்: 1118.

வயது 33 மௌத்கல்ய கோத்திரம். விசாக நட்சத்திரம் தாய் தந்தையற்ற சகோதரர்களும் இல்லாத குடும்பத்தில் பிறந்த பிராம்மண ஐந்தாவது வரை படித்த குடும்பப்பாங்கான மாநிறமுள்ள பெண்ணிற்கு நல்ல வேலையிலுள்ள திருமணமாகாத (அ) ஆகி தாரம் குழந்தையில்லாத 35 முதல் 40 வயதிற்குள் உள்ள வரன் தேவை. வீட்டிற்குத் தேவையான பொருட்களுடன் கோவிலில் திருமணம் நடத்தப்படும். பெட்டி எண்: 1119.

கௌசிக கோத்திரம் வடமான், திருவாதிரை. 32 வயதுள்ள எஸ். எஸ். எல். சி. வரை படித்த வசதியுள்ள பாலக்காட்டு அய்யர் பெண்ணிற்கு வேலை அல்லது வியாபாரம் செய்யும் வரன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். முதல் கடிதத்திலேயே விவரங்கள் எழுதவும். கேரளா, தமிழ்நாடு, கர்நாடகாவிலுள்ளவர்கள் மட்டும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1120.

வடமான், கௌசிக கோத்திரம், புனர்பூசம், வசதியுள்ள குடும்பம், பட்டதாரி, வயது 28, பாலக்காட்டு அய்யர் பெண்ணிற்கு தமிழ்நாடு கேரளா, கர்நாடகாவிலுள்ள படித்து வேலை பார்க்கும் வரன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 1121.

Wanted graduate bride 20/25 smart, pious fair, good looking, healthy, domestically trained for goodlooking, healthy, post graduate 27/170 drawing Rs. 1600/ of Vaniar Chettiar community other Tamil forward communities acceptable. Box No: 1122.

"மத்திய அரசில் பணியாற்றும் டி.எம்.ஈ. தேர்ச்சி பெற்ற 28 வயது வடமான் பிரிவைச் சேர்ந்த உத்திரட்டாதி, கௌண்டின்ய கோத்திரம், மாதம் ரூ. 1200 வருமானமுள்ள வாலிபருக்கு அழகுள்ள 26 வயது வயதுக்குட்பட்ட அரசு அல்லது தனியார் துறையில் வேலை பார்க்கும் பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 1123.

Vadama Nitruvea KasyapaGotram, Swathi star. Iyer Maintenance engineer 33 years/5' 9"/ Rs. 3400. Invites proposals from pretty modest, elegant pious Iyer, Iyengar girls. No Dowry. Photo must accompany details Box No: 1124.

Vadakalai Punarpusam Nakshatram Iyengar Nationalised Bank Officer 31 years/175 c. ms./3200 Rs. invites proposals from morally sound, pious, beautiful Iyengar girls. Sub divisions allowed. Iyers also Acceptable. No Dowry. send details, Photo necessary. Box No: 1125.

26 வயது ஸங்க்ருதி கோத்திரம். அஸ்வனி நட்சத்திரம் வங்கியில் பணிபுரியும் ப்ரஹசரணம் தமிழ் ஐயர் உயரம் 5'2" பட்டதாரிப் பெண்ணுக்கு நல்ல உத்தியோகத்தில் இருக்கும் தகுந்த வரன் தேவை. மணமகன் வங்கியில் வேலையிலிருந்தால் உத்தமம். பெட்டி எண்: 1126.

ஐயங்கார், வாதூல கோத்திரம், நல்ல நிறம், அழகு, எஸ். எஸ். எல். சி. டைப் ஹையர், ஷார்ட்ஹேண்ட் பிராக்டிஸ் உண்டு, தையலில் தேர்ச்சி, 7-ல் செவ்வாய் உள்ள 21 வயதுப் பெண்ணுக்கு நன்கு படித்த நல்ல அரசு உத்தியோகத்தில் வேலை பார்க்கும் 25-32 வயதுக்குள் மாப்பிள்ளை தேவை. வடகலை, தென்கலை உட்பிரிவு சம்மதம். இரண்டாந்தர மனைவி, குழந்தைகளில்லாத, வசதியுள்ளவரும் மேலே குறிப்பிட்ட வயதுள்ளோரும் இதே இனத்தில் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1127

'Lawyer groom (B. A. B. L.) 24, Thuluva Vellala, having properties (Houses & Shops) fetching a monthly rent of Rs. 600/- seeks good looking unemployed, birde, minimum education / Well to-do parents Mudaliar Pillai/Vellala/Vegetarian Agamudaiar and Vanniakula Kshatriya may send details, Horoscope and Photo.' Box No: 1128.

சென்னையில் தமிழக அரசில் நிரந்தர வேலையிலுள்ள 34 வயது முடிவுற்ற தெலுங்கு அய்யங்கார் ஸ்ரீவத்ஸ கோத்ரம் பெண்ணுக்கு (சம்பளம் மாதம் ரூபாய் 900) 40 வயதுக்குள் வரன்கள் தேவை. அய்யர் வரன்களும் விண்ணப்பிக்கலாம். கல்யாணம் நல்ல முறையில் நடத்தப்படும். பெட்டி எண்: 1129.

"வாதூல கோத்திரம், அஷ்டசகஸ்ரம், புனர்பூச நட்சத்திரம். பணிபுரியும் பெண் 29 வயது. இடக்கரம் சிறிது குறையுள்ளது. பையன் திருவோணம் 34 வயது மணமகளும் மணமகனும் தேவை. மதுரை விசேஷம். உட்பிரிவுகள் சம்மதம். பெண்

கொடுத்துப் பெண் எடுக்க சம்மதம்.'' பெட்டி எண்: 1130.

மத்திய அரசு அலுவலகத்தில் ஸ்டெனோகிராபராக பணிபுரியும் ரூ. 1200/- சம்பளம் பெறும் 33 வயது. ராஜு (தெலுங்கு பேசுபவர்கள்) இனத்தவருக்கு உத்தியோகத்திலுள்ள பெண் தேவை. பெட்டி எண்: 1131.

Suitable Hindu Nadar groom for fair, good looking M. A. (English), 160 c.ms. Convent educated bride Box No: 1132.

சட்டப்படி விவாகரத்து செய்துவிட்ட 15, 12, 8 வயதுள்ள கான்வென்டில் படிக்கும் சூட்டிகையான பையன்களைத் தன் பொறுப்பிலுடைய விஸ்வாமித்திர கோத்திரம், மகம், 42, DEE BHEL திருச்சியில் ரூ. 1600/- சம்பாதிப்பவருக்குத் துணைவி தேவை. வடமாளாகப் பிறந்து வைஷ்ணவராக மாறினவர். ஆசாரமான பக்திமான். பிராம்மணர்கள் எவரும் விதவையும் பரவாயில்லை. பெட்டி எண் 1133

''கௌசிக கோத்திரம், ப்ரஹசரணம் 28 வயதான தமிழ் ஐயர், டெலிபோன் ஆபரேட்டராக வேலை பார்க்கும் பையனுக்கு மத்திய, மாநில உத்தியோகத்திலுள்ள படித்த, அழகுள்ள, நல்ல குணம் உள்ள பெண் தேவை. உட்பிரிவு பரவாயில்லை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். போட்டோ இருந்தால் அனுப்பவும்.'' பெட்டி எண்: 1134.

''திருச்சி மாவட்டம் அசைவ வெள்ளாள செட்டியார் வகையறா, தமிழக அரசுப் பணியில் மாதம் ரூ. 900/- ஊதியம் பெறும், 33 வயது மணமகனுக்கு அதே வகுப்பைச் சார்ந்த நல்ல அழகும், வசதியும் உள்ள பெண் தேவை. அரசுப் பணியில் இருக்கும் பெண் விரும்பத் தக்கது.'' பெட்டி எண்: 1135.

கௌசிக கோத்திரம், வடமாள் வயது 33, உயரம் 5' 2'' திருவோணம் 4-ம் பாதம் எஸ். எஸ். எல். சி. மத்திய அரசின் இன்சூரன்ஸ் நிறுவனத்தில் கிளார்க்காக ரூ.1200 வருவாயில் பணிபுரியும் மணமகனுக்குப் படித்த, வேலைக்குப் போகும் பெண் தேவை. குடும்ப விபரம், ஜாதகத்துடன் அனுப்பவும். பெட்டி எண்: 1136.

ஆர். சி. எம். தனியார் பள்ளியில் ஆசிரியை. சம்பளம் 600. வயது 31. நாயுடு வகுப்பைச் சேர்ந்த பெண்ணுக்கு அரசாங்கத்திலோ, தனியார் நிறுவனத்திலோ வேலை செய்யும் நாயுடு வகுப்பைச் சேர்ந்த (உட்பிரிவு சம்மதம்) மணமகன் தேவை. குழந்தைகள் இல்லாத மனைவியை இழந்த இரண்டாந்தர மணமகனும் விரும்பப் படுவர். பெட்டி எண்: 1137.

Wanted Brahmin bachelor, well-qualified, holding senior position in India/Abroad, below 41 years, broadminded, not fussy about horoscope matching, for Athreya Iyengar daughter of top officer, graduate, early thirties, slim build, young looking, home loving. Decent early marriage. Box No: 1138.

சென்னையில் அரசாங்க உத்தியோகத்தில் மாத வருமானம் ரூ. 900/- உள்ள 36 வயதான மணமாகி இரண்டு மாதங்களுக்குள் மனைவியை இழந்தவர். சுமாரான கல்வியறிவுள்ள மூப்பனார் வகுப்பைச் சேர்ந்தவருக்கு அதே இனம் அல்லது இந்து மதத்தில் முற்பட்ட, பிற்பட்ட அடக்கமும், அழகும் உள்ள அரசாங்க உத்தியோகத்தில் இருக்கும் பெண் தேவை. ஜாதகம் இல்லை. பெட்டி எண்: 1139.

''வடமாள், கௌதம — எம். ஏ. எம்.எட். அரசுப் பள்ளியில் ஆசிரியையாக ரூ. 1000/- பெறும் 5' 1'' உயரமுள்ள 32 வயது அழகான பெண்ணிற்கு, தமிழ்நாட்டில் மாற்றல் பெற்றுக் கொள்ளக் கூடிய வங்கியிலோ, அரசுப் பணியிலோ இருப்பவர்கள் ஜாதகம், குடும்ப விபரங்கள், போட்டோவுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1140.

Wanted educated employed Non-Bharadwaja Brahmin bridegroom slightly Polio attacked Vadama graduate girl aged 30 years Central Govt undertaking employed. Sub sect no bar. Please correspond to Box No: 1141.

31 வயது நிரம்பிய அய்யங்கார் பெண், உயரம் 5' 2''. சிவப்பு. படிப்பு பி. ஏ. நல்ல குடும்பத்தைச் சேர்ந்த அரசாங்க வேலையில் இருக்கும் Graduate மணமகன் தேவை. கிறிஸ்தவ, முஸ்லிம் தவிர (இந்துக்கள் மாத்திரம்) எந்த வகுப்புப் பிரிவினரும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1142.

வடமாள் — ஸ்ரீவத்ஸ கோத்திரம், பூராடம் நட்சத்திரம். 33 வயது எஸ். எஸ். எல்.சி வரை படித்துள்ள குடும்பப் பாங்கான பெண்ணுக்கு 40 வயதுக்குள் உள்ள வரன் தேவை. மனைவியை இழந்தவர்களும் உட்பிரிவுகளும் பரவாயில்லை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1143



# சிரிப்பது கூடவா தப்பு?

என் மனதில் நீண்ட நாட்களாகவே ஒரு வருத்தம் உண்டு. பத்திரிகைகளில் கல்லூரி மாணவிகளைப் பற்றிப் போடும் போது ஏதோ அவர்கள் அலங்கோலமாக டிரெஸ் செய்து கொண்டு வருவது போலவும் கண்டபடி நடந்து கொள்வது போலவும் எழுதுகிறார்கள்.

பத்திரிகைகளில் என்றில்லை, சாதாரண நடைமுறை வாழ்க்கையிலும் நாங்கள் இப்படிப் பலர் பலவிதமாகப் பேசுவதையும் கேட்டுக் கொள்கிறோம். காலை அவசரத்தில் பஸ்—ஸ்டாண்டுக்கு ஓடோடி வந்து 'லேடீஸ் ஸ்பெஷலை மிஸ் பண்ணிவிட்டோமே' என்று கையைப் பிசைந்துகொண்டே சாதாரண பஸ்ஸில் கும்பலில் நெருக்கியடித்துக் கொண்டு ஏறும்போது ''இந்தக் காலேஜ் பொண்ணுங்களே இப்படித்தான். இவங்களுக்குன்னே லேடீஸ் ஸ்பெஷல் விடறாங்களே. அதுலே போகாதுங்க. இந்த 'கிக்' அதுல கிடைக்குமா'' என்று கண்ணைச் சிமிட்டிக் கிண்டலாகப் பேசும்போது வயிறெரிந்து கொண்டு சும்மா நிற்க வேண்டியதாக இருக்கும்.

கல்லூரி மாணவிகள் எல்லாம் 'ஜாலிக்காக' வந்து போகும் மாணவிகள் அல்ல. தாங்கள் வீட்டின் அத்தனை சிரமங்களையும் தாங்கிக் கொண்டு, கல்லூரியில் படிக்கும் பெண் என்ற கௌரவத்தையும் விட்டுவிட முடியாமல் ஒரு பீஸ் கட்டக் கூடத் திணறும் எத்தனை மாணவிகள் இல்லை? ஒரு பட்டமாவது இருந்தால்தான் ஏதாவது ஒரு வேலை கிடைக்கும், சம்பாத்தியம் இருந்தால் தான் எல்லா விதத்திலும் பயமுறுத்தும் எதிர்காலத்தை ஓரளவாவது சந்திக்க முடியும் என்று குமுறும் பெண்கள் எத்தனை பேர் இல்லை?

நாளும் நாளும் மனதினுள் பொங்கி கொண்டு, சிறிது நேரம் தோழிகளுடன் கலகலத்துச் சிரிப்பது கூடவா இந்தச் சமுதாயத்திற்கு கண்டுணரிச்சலாக உள்ளது? இவர்கள் எங்களின் துயரங்களைப் புரிந்து கொள்ள வேண்டாம்; கொச்சைப்படுத்திக்கேவலப்படுத்தாமல் இருந்தாலே போதும்.

-குமாரி பொன்னிதுர்கா லக்ஷ்மி.



ஆதர்ஷ வித்யாலயாவில் பன்னிரெண்டாம் வகுப்புப் படிக்கும் மாணவி குமாரி பத்மாவதி. பரதநாட்டியத்தில் தேர்ந்த அவர் ஜூனியர் ரெட்கிராஸ் சொஸைட்டியில் உறுப்பினரும் கூட. 'ஜப்பானிய ஜூனியர் ரெட்கிராஸ் சொஸைட்டி' கலாசாரப் பரிவர்த்தனையின் பேரில் இரண்டு உறுப்பினர்களை இந்தியாவிலிருந்து தேர்ந்தெடுக்க விரும்பினார்கள். அந்த வகையில் இந்தியா முழுவதிற்கும் நடந்த தேர்வுகளில் வெற்றிபெற்று, இரண்டு வாரம் ஜப்பானில் சுற்றுப்பயணம் செய்து திரும்பியிருக்கிறார் இந்த இளம்மாணவி.

வண்ணப்படம்: பி. ச. ரமணன்

Edited, Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: Manjula Ramesh.

REGISTERED No. TN MS (S) 231
Registered as a Newspaper in Sri Lanka

புலரும் இன்றைய
என் பொழுது
மகிழ்வாய்
மலருமே

பொங்கும்
மகிழ்வைக் கூட்டுமே
# ம:பத்லால் துணிகள்
மட்டுமே

ம:பத்லால் துணிமணிகள்
மென்மையானவை. உடலுக்கு இனிய
உணர்வைத் தருபவை. பாலியெஸ்டர்
பாலியெஸ்டர் ப்ளெண்ட்ஸ், மற்றும்
காட்டன் துணிகளில் நித்தம்
நித்தம் புத்தம் புதிய படைப்புகள்.
அவற்றின் வண்ணங்கள்,
நெசவுகள், மற்றும் வடிவமைப்புகள்
அனைத்தும் காலும் பொழுதும்
கற்பொலிவூட்டி உங்கள் அழகுக்கு
அழகூட்டுகின்றன.

ம:பத்லால்
:பேப்ரிக்ஸ்



MF-125TA